சிவமயம்

# குமரகுருபரன்




மலர் 18] 1967-ஆ கார்த்திகை மீ 1-ம் உ (17-11-67) [இதழ் 11

தனிப்பிரதி 25 பைசா வருடச் சந்தா ரூ. 3-00

# ஆசிரியர் குழு



## உள்ளுறை

பக்கம்

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை

# குமரகுருபரன்

மலர் 18 | பிலவங்க ஹு கார்த்திகை திங்கள் 1ம்௳ [17-11-67] | இதழ் 11

## நீதிநெறி விளக்கம்

(கட்டுரை 14)

தொண்டைமண்டலாதீனம் மகாசந்நிதானம்
சீலஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் அவர்கள்
ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிக சுவாமிகள் மடாலயம்,
காஞ்சிபுரம்.

முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியாற்
கல்லும் தகரும்; தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி ஞல்.

வேதங்கள் ஆகமங்கள் கலைகள் எல்லாம் கற்றறிந்து விட்டோம் என்று செருக்கடையாமல் ஒழிக. ஏன் செருக்குற லாகாது எனின், எல்லாவற்றையும் கற்றுணர்ந்தவர் எவருமிலர்.

யாரும் செருக்குறுமையால் நான் செருக்குறல் கூடாது என்று கட்டாயம் உண்டோ? நான் செருக்குற்றிருப்பேன். என்னைத் தடுப்பார் யார்? என் கல்விப் பெருக்கால் என்னை எதிர்த்து வெல்லுவார் யாவர் உளர்? அப்படியா? ஒருவரும் இலரோ? மலைகள் பெரியன. மிக்க திண்மையுடையன. அவற்றைத் துகளாக்கப் பெரிய சம்மட்டியை நாடுவதில்லை. சிறிய உளியைக் கொண்டே அப் பெரிய மலைகளையும் துகளாக்குதல் கண்கூடு. அதுபோல,

பெரியகல்வியேன் யான் என்றும் என்னை எதிர்ப்பார் யாரும் இலர் என்றும் செருக்குறும் உன்னை அடக்கப் பெரும் புலவர் ஒருவரும் வேண்டா. புலமைக் குறைவுடையவரும் உன்னை அடக்கிவிட வல்லவராவார்.

உலகில் யாரும், கற்றது கைம்மண்ணளவே, கல்லாதனவே உலகளவு. இது நாமகளுக்கும் தெரியும். தெரியவே இன்னும் அவள் கற்றுக் கொண்டேயிருக்கின்றாள். அவள் திருக்கையில் நூல் இருப்பது அதன் சான்றாகும். ஆயினும் மெய்கண்டார் முதலிய அருளாளர், திருக்கையில் இருக்கும் நூலைநோக்கி அவர் இன்னும் கற்றுக் கொண்டு வருகின்றார் என நினைத்தல் கூடாது. நினைப்பின் பொருந்துமோ?

முற்றும்:— நூல்கள் எல்லாவற்றையும், உணர்ந்தவர்-கற்றுணர்ந்தவர். இல்லை - யாவரும் இல்லை. முழுவதூஉம்-நூல்கள் எல்லாவற்றையும் கற்றனம் - கற்றுணர்ந்துவிட்டோம். என்று – எனக்கருதி, களியற்க - செருக்குறுதொழிக. கொல்-கொல்லனுடைய, உலைக்கூடத்தினால் - உலைக்களத்துள்ள சம்மட்டியினால், தகரா - துகளாகாதனவாகிய, கல்லும் - மலையும், சிற்றுளியால் - சிறிய உளியால், தகரும் - துகளாய்விடும்.

ஒருவர், நூல்கள்யாவும் உணர்ந்துவிட்டோம் எனச்செருக்குறுதலாகாது என்பது கருத்து என்றனர். அது முன்னிரடிக்கு மட்டும் பொருந்தும். பின்உள்ளவற்றை நோக்கின் அது பொருந்தாது.

'பலகற்றோம்யாம் என்று தற்புகழவேண்டா' என்பதுமட்டும் கருத்தாயின். "சிற்றுளியால் .............. கூடத்தினால்" என்னும் பிற்பகுதி வேண்டாததே.

பெரியகூடத்தினுல் தகராதபெரியதிண்ணிய மலையும் ஒரு சிற்றுளியால் தகரும் என்றதால், முழுவதும் கற்றவனும் சிறிது கற்றவனுல் அடக்கப்பட்டுச் சிறுமையடைவன் என்பது வெளிப்படை. சிற்றுளி சிறிதுகற்றவனுக்கும், கல் (பெருமலை) முற்றும் உணர்ந்தவனுக்கும், கொல்லுலைக்கூடம் பெரிதுகற்றவனுக்கும், அதனுல் அக் கல் தகராமை பெருங்கல்வியாளனுல் முற்றுணர்வுடையான் அடக்கப்படாமைக்கும், சிற்றுளியால் அக்கல் தகர்ந்து சிறுமையடைவது சிறிதுகற்றவனுல் முற்றும் உணர்ந்தவன் அடக்கப்பட்டுச் சிறுமை யடைவதற்கும் ஆளப்பட்டன ஆதலின், முன்னீரடிமட்டும் கருதிக்கூறும் கருத்து எங்ஙனம் பொருந்தும்? களியற்க என்றது மட்டும் கருத்துணர்த்துமோ? தகராதன தகரும் என்றதையும் கருத்திற்பொருத்தல் வேண்டும்.

பலகற்றேம் யாம் என்று தற்புகழ்தல் வேண்டா என்று முதலிற் கூறிப் பின்னர், 'அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையும் காக்கும்' என்றது ஏன்? பலகற்றூர்க்கு அச்சாணியன்னதொரு சொல் சிலகற்றூர் கண்ணும் உளவாம். அவற்றுள் ஏதேனும் ஒரு சொல்லே அடக்கிச்சிறுமையுறுத்தும். முழுவதும் கற்றேம் என்று செருக்குறும் ஒருவனது பெருமையைச் சிறிது கற்றவனிடம் உள்ளதும் பெரிய தேர்க்குச் சிறிய அச்சாணி போல்வதும் ஆனதொரு சொல்லே சிறுமையுறுத்தும்.

யாம் கல்வியாற் கடலே அனையம் என்னும் கொல்லேறு போலுஞ் செருக்கில் தன்னை ஆழ்த்திக் கொண்டுவிட்ட ஒருவன் சிற்றறிவனுல அககடலையும் உழுநதளவாக்கிக் குடிததடக்கிய குறுமுனிவர் போன்று அடக்கி விடப்படுவன்.

'கடலே யனையம் யாம் கல்வியால் என்னும்
அடலே றனைய செருக் காழ்த்தி — விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலும் உண்ணப் படும்.' (நன்னெறி)

இலக்கணக் கல்வியில்லாதார் கல்விப்பெருக்கம் எல்லாம் அக்கல்வியுடையார் முன்னே நில்லாது.

'எழுத்தறியார் கல்விப் பெருக்கம் அனைத்தும்
எழுத்தறியார்க் காணின் இலையாம்,' (ஷை)

'கல்வி' என்பது கற்குஞ் செயற்கையால் என்றும் அழி யாது நிற்கும் இயற்கையையுடைய ஞானத்தையும் குறித்தல் உண்டு. கற்றல் கேட்டல் உலக நூலுக்கே உரிய அல்ல. ஞான நூல்களுக்கும் உரியனவே. அக்கல்வி ஞானம் கடவு ளுருவம், இதனை உண்மையில் உணர்வார் ஆயின் என்றும் எவரும் நாத்திகராகார்.

கடவுளுருவாகிய ஞானத்தை நாமாக அறிந்து கோடல் இயலாது. அக்கடவுளே காட்டினால் அன்றி நம்மாற் காண்ட லில்லை. 'காண்பார் ஆர் கண்ணுதலாய்க் காட்டாக்காலே' என்னும் அரசருளுரையின் உட்கோள் ஈதேயாம்.

உலகியலில் முழுவதும் கற்றுணர்ந்தாரில்லாதவாறுபோல அருளியலிலும் முற்றும் உணர்ந்தவர் இல்லை. முற்றுணர்வினன் சிவபிரான் ஒருவனேயாம். 'சர்வஞ்ஞன்' அவனன்றி வேறெவ ரும் இல்லை. இதனை எத்தனை மதத்தர் வாதத்திற்குவரினும் அத்தனையோர்க்கும் இசைந்துவக்கும்படி நாம் உணர்த்தச் சித்தம். இதில் "ஐயுற வேண்டா ஒன்றும்," சிவமே முற்று ணர்வுடைய முழுப்பரம் பொருள்.

சிவபிரான் தன் இயல்பைத் தானே உணர்த்தினாலன்றி, நாம் அறியவழியில்லை. அவனும் உணர்த்தாதிரான். நாமும் எப்பிறப்பிலேனும் உணராதிரோம், "அறிவிக்க அன்றி அறியா வுளங்கள்' நாம். நம் அறிவில் மேவாமல் மேவி நம்மையும் நாமல்லாத பிறவற்றையும் தன்னையும் உணர்த்தும் தலைவன் அவன். 'அருக்கன் கண்ணுக்குக் காட்டுமாபோலே உனதறிவில் நண்ணி யறிவித்திடுவோம் நாம்' என்பது உண்மை விளக்கம். பொய்விளக்கம் நம் சமயத்திலே உண்டோ? நமக்கு உணர்த்தும் வன்மை அவ்விறைவனுக்கு எவ்வாறுளதாயிற்று? இக்கேள்வி எளிதில் எழலாம். சர்வஞ்ஞன் (முற்றுணர்வினன்) என்னும் ஒன்றே அக் கேள்விக்குரிய விடை. 'எக்கண்ணும் நில்லாவிடத்து உயிர்க்கு நில்லாது அறிவு' என்பதும் அவ் வுண்மைவிளக்கமே. 'இறைவன்' என்பதன் பொருள் எங்கும் தங்கியவன் என்பதே. எங்கும் என்றும் உள்ளவன் உயிர்க்கு உணர்த்த வேண்டும் இடங்களில் எல்லாம் அங்கு அங்கு உணர்த்துவதில் குறை யுண்டோ?

எங்கும் நிறைந்த நிலையை 'அகளம்' என்பர். அங்கங்கு உணர்த்தும் பொருட்டு ஒவ்வொருயிரிலும் இருக்கும் நிலையைச் 'சகளம்' என்பர். யாரும் அறிதற்கரிய அவ்வகளப் பொருள், அறிதற்கு எளிதாய்ச் சகளமாய்வாராதேல் உயிர்க்கு அறிவுநிகழ்ச்சியும் வளர்ச்சியும் அவற்றின் பயனாகிய இன்பப் பேறும் துன்ப நீக்கமும்உளவாகா. ஒவ்வோருயிர்க்கும் உள் நின்று உணர்த்தி வருவது உயிர்க்குயிராய் மேவியுணர்த்தும் இறையருளே யன்றி வேறில்லை. நம்முடம்பு நமக்குமட்டும் உரித்தன்று. நமக்குள்ளிருக்கும் கடவுளுக்கும் உரியதே. நம்மைநோக்கின் நம்முடல் நமக்கு நம் வினைப்பயனாக வந்த யாக்கையாம். நமக்கு உள்ளிருக்கும் கடவுளை நோக்கின் அக்கடவுள் நமக்கு எப்பொழுதும் உணர்த்திவரும் உண்மையை இடைவிடாது நோக்கிவரின், நமக்குடலாகக் கருதப்படும் இவ்யாக்கை அவனுக்கு மானிடச் சட்டையாக அமையும். அவ்வாறு அதில் அவ்வுடல் அடங்கும் உண்மையை அநுபவத்தால் உணர்ந்து கொள்ளலாம், புறத்தே நிற்கும் குருவடிவே மானிடச்சட்டையது என்பது வேறு, இவ்வுண்மையைத் திருவுந்தியாரின் முதற்கண்ணி நன்றாகத்தெளிவிக் கின்றதை நோக்குங்கள்.

> 'அகளமாய் ஆரும் அறிவரிது அப்பொருள்
> சகளமாய் வந்ததென் றுந்தீபற
> தானாகத் தந்ததென் றுந்தீபற'

இச் சகளமாய் வந்த அவ்வகளப் பொருள் என்ன பயனை விளைக்கும்? இதுவே சீரியவினா. உயிர் உயிராயே இருந்து பிறப்பும் இறப்பும் உற்றுப் பெருந்துயர்க்காளாகாமல், பிறவா யாக்கைப் பெரியோனாகிப் பேரின்பமே துய்க்கும் பெருவாழ்வாம் முடிந்த பயனை விளைக்கும். இது தான் அவ்வினாவிற்குத் தக்க மெய்விடை. இதைத் தான் 'தானாகத்தந்தது' என்று முடித்தது அக் கண்ணியின் பொருள். அகளம் சகளம் என்பனவற்றின் வேறுபாடு

> 'அகளமய மாய் நின்ற அம்பலத்தெங் கூத்தன்
> சகளமயம் போல் உலகிற் றங்கி — நிகளமாம்
> ஆணவ மூலமலம் அகலஆண்டனன் காண்
> மாணவக என்னுடனாய் வந்து.'

என்னுந் திருவெண்பாவில், அகளம். சகளம், ஆணவமுலமலம், அகல ஆண்டனன், என்னுடனய் வந்து' என்னும் அருண் மொழிகளின் பொருளே ஊன்றி யுணர்வார்க்கு ஒரு கால் விளங்குதல் கூடும். சகளமயம்:- அருள் வடிவும் தானுமாயுயிர்க் குயிராய வடிவு. அகள மயம்:- எல்லாவுலகுக்கும் அப்புறத்தும் இப்புறத்தும் அம்மையப்பராய் நிற்கும் பெருவடிவு.

'அறியாமை உள்நின்று அளித்ததே, காணுங்குறி,
ஆக நீங்காதகோ'

என்னுந் திருவருட்பயன் சகளத்தையுணர்த்து மாறறிக.

குமரகுருபரமுனிவரர் பல நூற்ருண்டுகளுக்கு முன்பே சைவசித்தாந்தத்தை மிகத் தெளிவித்த பெருமானுர். எவ்விடயத்தையும் உயரிய நியாயாதிபதி ஆய்ந்து கூறும் தீர்ப்பே போலச் சொல்லுந்திறன் அவர்க்குஇருந்தது. அத்திறன்கவிஞர் பிறர்க்கு இருக்கக் காண்கின்றிர்களோ புலவீர் புகல்மின், அக்காலப் பாவலர் திறனே ஆய்மின்.

அவற்றுள் ஒன்று இந்நீதிநெறிவிளக்கப் பாடலுக்கு ஒத்த தாகக்காட்டுதும்.

முற்றும் உணர்ந்தவரில்லே என்பது அருளியலிலும் உண் டன்ருே? அதனைக் குறிக்கும்இடம் இது:—

.... .... .... ... .... .... .... .... ... ... "தில்லேவாண
அன்பருக் கெளியை ஆகலின் ஐய
நின்பெருந் தன்மை நீயே இரங்கி
உள்நின்று உணர்த்த உணரின் அல்லதை
நுண்ணூல் எண்ணி நுணங்க நாடிப்
பழுது இன்று எண்ணிப் பகர்தும் யாம்எனின்,
முழுதும் யாரே முதுக்குறைந் தோரே
நால்வகைப் பொருளும் நவைஅறக் கிளந்த
வேத புருடனும் யாது நின்நிலே எனத்
தேறலன் பலவாக் கூறினன் என்ப.

அதா அன்று

முன்னேநான் மறையும் முறைப்பட நிறீஇய
மன்னிருஞ் சிறப்பின் வாதரா யணனும்
கைஇழந் தனன் அது பொய்மொழிந் தன்ருே?

அதனுல்

தெளிவில் கேள்வியிற் சின்னூல் ஓதி
அளவா நின்நில அளத்தும் போலும்
அறிவும் ஆயுளும் குறையக் குறையாத
பையுள் நோய் எண்ணில படைத்துப்
பொய்யுடல் சுமக்கும் புன்மை யோமே."

என்றுள்ள சிதம்பர மும்மணிக் கோவைச் செய்யுளின் பகுதியால், முற்றுமுணர்ந்தவரில்லை என்னும் உண்மை நியாயாதிபதி தீர்ப் பாகத் தெளிவித்தவாறுணர்க.

இதன் முடிவில் உள்ள ஐந்தடிகளின் பொருளொடு

"கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கிற் பிணிபல — தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து,"

என்னும் நாலடிப் பாடற்பொருளை ஒருங்குவைத்துணர்தல் நன்று. இதனுட் குறித்த உவமையை அம் மும்மணிக்கோவை யில் தேடல் வேண்டா. 'கல்வி கரையில' என்றதற்கு அளவா நின்னில என்றதும், கற்பவர் நாள்சில என்றதற்கு 'ஆயுளும் குறைய' என்றதும், மெல்ல நினைக்கிற் பிணிபல என்றதற்குக் 'குறையாதமையுள் நோய் எண்ணில படைத்துப் பொய்யுடல் சுமக்கும் புன்மை போம் என்றதும் விளக்கம் ஆதல் அனை வர்க்கும் புலப்படலாம்.

இப்பாடலின் உரைகளிற் பலர் எழுதிய இலக்கணக் குறிப் புக்கள் மிக்க வியப்பையூட்டுவனவாக உள. அவற்றுட் சில காட்டுதும்:—

முற்று – முதனிலை வினையாலணைந்த பெயர். கர்த்தாப் பொருள் விகுதி புணர்ந்து கெட்டது என்னவுமாம். இவர் புணர்ந்து கெட்டிருக்கலாம். இங்கு யாதும் புணர்ந்ததாக் கெட்டதாக் காணவில்லை, உம் – முற்றும்மை முழுவது – முழுமை என்கிற பண்படியாக வந்த பெயர், பண்படி 'முழுமை'யோ? 'கொல்லன்' – கொல் ஆயுதத்தின் பெயர்'. அதையுடையானுக்கு ஆகுபெயர். இதுவும் எடுத்துக்காட்டுவமை யணி. உவமேயம் யாது? உவமானம் யாது? எதற்கு எதை

எடுத்துக்காட்ட லாயிற்று? தமிழ்த் தெய்வப்பதிப்பு 'ஒட்டணி' என்றது பின்னிரடிகளை. வி. கோ. சூ. வேற்றுப்பொருள்வைப் பணி என்று விளக்கினர். அது பொருந்தும். முழுவதும்:- முழுவது: உரிச்சொல், இது பண்பாய் நூலை உணர்த்தி அவ் வாகுபெயராய் நின்றது. முழுமைபகுதி, என்றெழுதினர் ஒரு வர். 'முழுதென்கிளவி யெஞ்சாப் பொருட்டே' தொல்சொல் உரிப்பியல் 30. பெயரியல் 32. சேனாவரையம், மதுரைக் காஞ்சி 479. 266. நச்சினார்க்கினியம் பார்க்க. புறம்:- 219, 325, 326, 366, 379, 399 முழு. 116, 58, 52. நல்+மை=நன்மை. இதில் எது பகுதி? நன்மை பகுதியாமோ? பகுதியிற்றள்ளுதற் குரியதும் இருப்பின் அது பகுதி எனப்படுமோ? நன்னூலிற் 'பகாநிலைப்பதம்' (135) என்றது எதனை? அச்சூத்திரத்தினுரையில், ஆசிரியர் சங்கர நமச்சிவாயப் புலவர், "பகுதியாய பண்புப் பொருளினின்றும் வேறு பொருள் பகுக்கப்படாத நிலைப்பதம் ஆம்" என்றெழுதினர். 'பண்பின் பகாநிலைப்பதம்' என்றதற்கு செவ் வுரை அவ்வுரையே. பண்பின் – பண்புப் பொருளினின்றும் என்றார். 'சொல்' என்னாது 'பொருள்' என்றது அறிதற்பாலது. மேலும் அவர் எழுதிய பதசாரம் இது:—

"இங்ஙனம் கூறிய வாய்ப்பாடு முதலிய வெல்லாம் சொல் நிலையாற் பகுபதம் ஆயினும், மைவிகுதிக்குப் பகுதிப் பொருள் அன்றி வேறு பொருள் இன்மையின், பொருள் நிலையாற் பகுக்கப் படாது என்பார், பண்பிற்பகா என்றும், "மெய்யினியக்கம் அகர மொடு சிவணும்" என்றாற் போல இங்ஙனம் கூறிய வாய்பாட் டுப் பண்புகள், மைவிகுதியின்றி இயங்காமையின், இவ்விகுதி யினையும் பகுதியாக நிறீஇ, மேல்வரும் விகுதி யொடுபுணர்க் கப்படும் என்பார் நிலைப்பதம் என்றும் கூறினர்."

அவரே, "நல்லன் வல்லன் என்பன ஈற்றுவிகுதி போயின. கரியன் பெரியன் என்பன ஈற்றுவிகுதி போய் உகரம் இகரமாயின. பாசி பாசடை என்பன ஈற்றுவிகுதி போய் ஆதி நீண்டன என் பவை முதலியவற்றால், 'மை'யை ஈற்று விகுதி என்றே குறித்தார். பகுதி என்றாரல்லர். பகுதிப்பொருள் விகுதி என்னும் வழக்கும் நோக்கற்பாலது. பொருளாற் பகுதிப் பொருளனவாம். சொல் லாற் பகுதியாகா.

"பகுதி விகுதி முதலிய உறுப்பும் உறும்பின் பொருளும் தரும் ஒரு சொல்லைப் பகுபதம் என்றமையின், சொன்மை, பொருண்மை, வின்மை, செம்மை, சிறுமை, நடத்தல், வருதல் முதலிய சொற்கள் பகுதி விகுதியாகப் பகுக்கப் படுதலானும் விகுதிக்கு வேறு பொருள் இன்றிப் பகுதிப் பொருள் விகுதியாய் நிற்றலானும் சொன்னிலையாற் பகுபதம் என்றும் பொருள் நிலையாற் பகாப்பதம் என்றும் கொள்ளப்படும் என்க." ( 132 உரை ) இங்குக் 'கொள்ளப்படும்' என்றதை ஊன்றியுணர்தல் வேண்டும். சொல் நிலையாற் பகுபதம். பொருள் நிலையாற் பகாப்பதம் என்று கொள்ளப்படும்.

"பன்மை சின்மை யெனப் பகுதிப்பொருள் விகுதி யோடேனும் பலர்பல சிலர்சில என விகுதிப்பொருள் விகுதி யோடேனும் அன்றித் தனித்து நில்லா ஒற்றுமை நயம் (170. உரை) என்றதும் ஈண்டுநோக்கத்தக்கது.

சிவஞானசித்தியார். சூ. 12:-5. உரையிலே, 'குருவும் இவனே ஈசன் (+உம்) இவன்தான்' என்ற இடத்தில், பாடபேதத்தால் உரைவழுநேர்ந்தது. அங்கே, 'ஈசனிவன் என்புழி இவன் என்பது பகுதிப்பொருள் விகுதி.' என்றுரைத்திருக்கின்றது. 'இவன்' என்பது விகுதி யாமோ ? 'ஈசன்' என்பது பகுதியாமோ ? இரண்டும் பகுபதமே. 'ஈசன்' என்பது வடசொற்றிரிபு ஆதலின் பகுபதம் என்றுணர்வது அரிது. னவ் வீற்றை நீக்கி நோக்கியுணர்தல் வேண்டும். இ+அன்=இவன். அ+அன்= அவன். உ+அன்=உவன். இ+அன்=இயன் என்று யகரவுடம்படுமெய் பெறுதலென்னை எனலாம், இ+இடம்=இய்யிடம் என்னாது இவ்விடம் எனல் என்னையோ ? இய்யாறுஎன்றிலர் இவ்வாறு என்றே கொண்டனர். ஈ+ஆர்= ஈவார். ஈ+ஆர்=ஈயார் எனல் என்னையோ ?

"கோக்கள் மனுக்கள் என்றற்றொடக்கத்தன பகுதிப் பொருள் விகுதியீற்றுப்பெயர்கள். தமர்கள் நமர்கள் அரசர்கள் அரசிகள் மறவர்கள் மறத்திகள் என்றற்றொடக்கத்தன விகுதிமேல் விகுதியீற்றுப் பெயர்கள். இவ்விகுதிமேல் விகுதி இடைச்சொல்லாதலின்." (278) இன்னும் பல இலக்கணக் குறிப்புக்கள் வெவ்வேறுரையில் உள்ளன. அவற்றை விரிப்பின் அகலும்.

———

(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 18, இதழ் 10-ன் தொடர்ச்சி]

## IV

## MANIKKA VASAHAR

(Sanskrit form MANIKYA VACHAKA)

85 வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
 பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
 பதைத் துருகு மவர்நிற்க வென்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சா
 யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
 கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே.

85 At sound of cries like this, "O Bull-rider whose spreading hair
 The falling stream receives! Heaven's Lord," true devotees there were,
Whose love-thrilled heart broke forth, like stopped-up rivers rushing down.
Yet Thou didst choose no one of them, but me to be Thine own.
And yet my body will not turn from heel to head one heart
To melt in love for Thee, one eye to shed the tears that smart
In swelling floods. Ah! wretched that I am, who only moan!
My two eyes are unfeeling wood, my heart a great dead stone!

(To be continued)

---

# மணிமொழி விளக்கம்

சித்தாந்தக் கலைமணி, மகா வித்துவான்,
திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள்,
தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி பேராசிரியர், தருமபுரம்.

## திருவம்மானை
### 4 – ம் திருப்பாட்டு
### "வான்வந்த தேவர்களும்"

மூன்றுமவள் எறிந்த அம்மனைக் காயை ஒருத்தித் திறம் படப் பிடித்துத் தானும் ஒரு பாடலைப்பாடி எறிகின்ருள். இவளும் முன்னவள் போலவே சிவபெருமான் எளிவந்து ஆட்கொள்ளப் பெற்றவளே. அதனால், முன்னவள் பாடிய பாட்டையும் கருத்தோடு கேட்டாள். கேட்டு, அவள் சொல்லிய கருத்திற்கு மேல் ஒரு சிறப்புக் கொடுத்துத்தான் ஒரு பாடலைப் பாடி எறிகின்ருள். அப்பாடல் வருமாறு:—

வான்வந்த தேவர்களும் மாலயனே டிந்திரனும்
கான்நின்று வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போல் தலையளித்திட்
டூன்வந் துரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் தெளிவின் ஒளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானய்.

முன்னவள் பாடிய பாட்டில், சிவபெருமான் தன்முன் எழுந்தருளி வந்து தன்னை ஆட்கொண்ட பொழுது, இந்திரனும், மாலயனும், ஏனேரும், வானேரும் அந்தரத்திலே நின்று பார்த்துக் கொண்டு, தமக்கு அவ்வாறு சிவபெருமான் அருள்செய்யா

---

தருமையாதீனப் பல்கலைக்கல்லூரி பேராசிரியர், சித்தாந்தக் கலைமணி, மகா வித்துவான், திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள், நம் வேண்டுகோளுக்கிணங்கி திருவாசக உரை 'குமரகுருபரனுக்கு'த் தொடர்ந்து உதவ இணங்கியுள்ளார்கள்.

மையை நினைந்து ஏக்கற்றுவாளா இருந்தனர் என்பது போலக் கூறினுள். ஆனால், இவள் அவ்வாறு கூருமல், அதற்கு மேலும் ஒரு படி சென்று கூறுகின்றுள்.

தேவர்களும், இந்திரனும், 'மால்அயன்' என்பவர்களும் எத்தகையோர்? இம் மண்ணுலகத்திலன்றி விண்ணுலகத்தில் இருப்பவர்கள் ஆயினும், இறைவனது திருவருளைப் பெறவிரும்பும் பொழுது அவர்கள் இம் மண்ணுலகிலே வந்து தவம்புரிய வேண்டுவோர் ஆகின்றனர்.

மண்ணுலகில் தவம்புரிவோர், 'முனிவர்' எனப்படுவர். அவர்கள் தம் தம் பக்குவநிலைக்கு ஏற்பத் தேவருள் ஒவ்வொருவரிடத்து அன்பு பூண்டு, அவரை நோக்கித் தவம் செய்வர். அவருள் தேவதேவனுகிய சிவபெருமானையே நோக்கி அவனிடத்தில் அன்பு பூண்டு தவம் செய்வோர் மிகச் சிலர். அவருள்ளும், இவ்வுலகப் பயன் வேண்டி அதன் பொருட்டுத் தவம் செய்யாது, சிவபெருமானது திருவடிப்பேறு ஒன்றையே கருதித்தவம் செய்வோர் அரியர்.

உலகப்பயனுள் யாதொன்றை வேண்டிச் செய்யப்படும் தவமாயினும் அது, 'காமியத் தவம்' எனப்படும். அப்பயன் யாதொன்றையும் வேண்டாது, சிவபெருமானது திருவடிப் பேறு ஒன்றையே விரும்பிச் செய்யும் தவம், 'நிட்காமியத் தவம்' எனப்படும். காமியத் தவம் செய்வோரிடத்துத் தேவர்கள் தம் ஆற்றலைக் காட்ட முற்படுவர். ஆனால், நிட்காமியத் தவத்தைச் செய்வோரிடம் அவ்வாறின்றித் தேவர்கள் அச்சமும், அடக்கமும் கொண்டு அவர்களை வழிபட்டுச் செல்வர். மற்றும் தங்களுக்கு உள்ள குறைகளை நிட்காமியத் தவம் செய்யும் முனிவர்களை வேண்டி முடித்துக் கொள்ளவும் தேவர்கள் முயல்வார்கள். இதற்கு, அகத்தியர், உபமன்னியர், துருவாசர் முதலிய முனிவர்களது வரலாறுகள் சான்ருகும். இத்தகையோரே,

"நாம்ஆர்க்குங் குடியல்லோம்; நமனை அஞ்சோம்;
நரகத்தில் இடர்ப்படோம்; நடலை இல்லோம்;
ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோ மல்லோம்;
இன்பமே எந்நாளும்; துன்பம் இல்லை" (அப்பர்)

என்றும்,

"காலனையும் வென்றோம்; கடுநரகம் கைகழன்றோம்;
மேலை இருவினையும் வேரறுத்தோம்"

(காரைக்காலம்மையார்)

என்றும் துணிந்துரைப்போராவர். இவர்கள் போன்றோரது தவப் பயனையே,

"கூற்றம் குதித்தலும் கைகூடும், நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு"

எனத் திருவள்ளுவர் எடுத்தோதினர்.

காமியத் தவம் செய்வதாயின், மிகவும் மெய்வருந்திச் செய்யவேண்டிவரும். நிட்காமியத் தவம் மெய்வருத்தம் இன்றியே கைகூடும். 'பகீரதன் பல்லாயிரம் ஆண்டுகள் தவம் செய்தான்' என்றும், 'திருமால் நாள்தோறும் ஆயிரந் தாமரை மலரைக் கொண்டு அருச்சனை செய்துவரும் நாளில், ஒருநாள் ஒரு பூக்குறைய, அதனை நிரப்ப வேண்டித் தம் கண்ணைப் பறித்துச் சாத்தினர்' என்றும் சொல்லப்படுவனவெல்லாம் காமியத் தவத்தின் கடுமையையே குறிக்கும். திருக்கைலையில் வில்வ இலையை இயற்கையாகப் பறித்து இறைவன்மேல் வீழ்த்திய முசுவும், சிவாலயத்தில் விளக்கொன்றைத் தன் இயற்கைச் செயலால் மிகுந்து எரியச் செய்த எலியும், திருவானைக்காவில் உள்ள சிவலிங்க மூர்த்தியின்மேல் வாய்நூலாற் பந்தல் இட்ட சிலந்தியும் முறையே முசுகுந்தன், மாபலி, கோச்செங்கணன் என்னும் அரசர்களாகப் பெற்றமை முதலிய வரலாறுகள் நிட்காமியத் தவத்தின் எளிமையையே காட்டும். எனவே, காட்டில் நெடுங்காலம் ஒரு நிலையிலே காய கற்பத்தால் அசையாது நின்று, விலங்குகள் மேலே உராய்ந்து செல்வதையும், பாம்பு முதலியன மேலே ஊர்ந்து செல்வதையும், புற்று வளர்ந்து உடம்பை மூடிக்கொள்ள, அப்புற்றின்மேல் மரம் செடி கொடிகள் முளைத்து வளர்ந்து காடாகி விடுவதையும் அறியாமல் ஊண் உறக்கம் இன்றிச் செய்யும் தவங்கள் பெரும்பாலும் காமியத் தவங்களேயாதல் விளங்கும்.

காமியத் தவம் உலகப் பயன் கருதிச் செய்யப்படுவதனாலும், உலகப்பயன் வினைவழி வருவதாய் நல்வினையின் விளைவாதலாலும், அப்பயனைத் தடுப்பனவாய தீவினைகள் பலபிறப்

புக்களிற் செய்யப்பட்டு மலைபோலக் குவிந்துகிடத்தலாலும், அத்துணைத் தீவினைகளையும் வென்று தாம் கருதிய பயனை விளைத்தற்கு வேண்டும் நல்வினைகளை மிகுவித்தற் பொருட்டு அதனை மிகக் கடுமையாகச் செய்ய வேண்டியுள்ளது. நிட்காமியத் தவம் உலகப்பயனை வேண்டாது ஒதுக்கி, இறைவன் திருவருள்வழி நின்று செய்யப்படுவதாதலாலும், தன் அருளைப் பெற விரும்புவார்க்கு அதனை விரைந்து வழங்குவதே இறைவன் திருவுளக் குறிப்பாதலாலும் அஃது எளிமையாகின்றது. இதனை,

"புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
உண்டி யாய்அண்ட வாணரும் பிறரும்
வற்றி யாரும்நின் மலரடி காணு
மன்ன, என்னைஓர் வார்த்தையுட் படுத்துப்பற்றினாய்"

என அடிகள் வேறோர் இடத்தில் அருளிச் செய்கின்றார். இவற்றால் காமியத் தவம் அகத்திற் கிடைத்தல் எளிது; புறத்திற் கிடைத்தல் அரிது என்பதும், நிட்காமியத் தவம் அகத்திற் கிடைத்தல் அரிது; புறத்தில் கிடைத்தல் எளிது என்பதும் விளங்கும். இவ்வெளிமையையே,

"போதும் பெறுவிடிற் பச்சிலை உண்டு;
புனலுண்டு; எங்கும்
ஏதும் பெறுவிடில் நெஞ்சுண் டன்றே,
இமையாத வெற்பும்
சூதும் பெறுமுலை பங்கர்தென்
தோணி புரேசர் வண்டின்
தாதும் பெறுத அடித்தா மரைசென்று
சார்வதற்கே"

என்று விளக்கினார் பட்டினத்தடிகள். காமியத்தவத்தைக் கடுமையாகச் செய்யினும், அதனாற் பெறப்படும் பயன் சிறிதாயும், அதுவும் பின்னர்த் துன்பத்திற்கு ஏதுவாயும் இருத்தல் பற்றி, "காமியம் செய்து காலம் கழியாதே" என்று அப்பர் அறிவுறுத்தியருள்கின்றார்.

தேவர்களும் மண்ணுலகில் வந்து தவம் செய்யும்பொழுது நிட்காமியத் தவத்தைச் செய்வார்களாயின், அவர்கட்கு இறைவன் எளிதில் வெளிப்பட்டு அருள் புரிவான். காமியத் தவத்

தைச் செய்வார்களாயின், நெடுங்காலம் அவர்கள் அத்தவத் திலே இருக்க வேண்டுவது முறையாய் விடும். ஆகவே, முன் னவள் கூறியபடி தேவர்கள் இறைவனைக் காணாது ஏக்கற்றி ருத்தல், தவம் செய்யாமையால் அன்று; பெருந்தவத்தைச் செய் துங்கூடக் காண இயலாதவராய் உள்ளனர் என்பதையே இவள், "வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும் கான்நின்றும் வற்றியும் புற்றெழுந்தும் காண்பரிய-தான்" என்று பாடுகின்றாள். "இந்திரனும்" என்றது, "தேவர்களும்" என்றதன் பின் வைத் தற்கு உரியது. கான் – காடு. அதனிடத்து நிற்றல், ஒரு காலிலே நிற்றலாம். வற்றியது உணவில்லாமையாலாம். நெடுங் காலம் அசைவின்றி நிற்றலாம். புற்று எழுந்து – வளர்ந்து மூடிக் கொண்டது. அவ்வாறிருந்தும் அவர்கட்கு இறைவன் காட்சி தரவில்லையெனறால், அதற்குக் காரணம், அவர் பக்குவம் இன்மையேயாம். அஃதாவது, இறைவனை அன்பினால் வழிபடும் நிலை இல்லாது, பயன் கருதி வழிபடும் நிலையிலே இருத்தலாம். எனவே அவரது தவம் காமியத் தவம் என்பது விளங்கும்.

தேவர்களும், இந்திரனும், மாலயனும் மக்களினும் எத்துணை உயர்ந்தவர் என்பதைக் குறிப்பிடவே, "வான்வந்த தேவர்கள்" எனக் கூறினாள். வான், வானுலகம். அதன்கண் வருவதலா வது, சென்று பிறத்தல். பூமிக்கு மேல் உள்ள உலகம் அனைத் தும் பொதுவாக, 'வானுலகம்' என்றே சொல்லப்படும். எனி னும், அவை பலவகைய. பூமியை அடுத்து மேலே உள்ளது புவலோகம். இது, மேகமண்டலம், வாயுமண்டலம், சந்திர மண் டலம், சூரிய மண்டலம் முதலாகப் பல மண்டலங்களை யுடையது. இதற்கு மேலே உள்ளது சுவலோகம். தேவர்களும், இந்திரனும் வாழும் சுவர்க்கலோகம் எனப்படுவது இதுவே. இதற்குமேல் உள்ளது மகலோகம். இங்கு நிலவுலகை நோக்கிநிற்கும் மரீசி முதலிய முனிவர்கள் வாழ்வர். இதற்குமேலே உள்ளது பிதிரர் களும், அவர்களோடு ஒத்த முனிவர்களும் வாழும் சனலோகம். இதற்கு மேலே உள்ளது தவலோகம். இங்கு இறைவனை அடைய விரும்பித் தவம் செய்யும் சனகர் முதலிய முனிவர்கள் இருப்பர். இதற்கு மேலே உள்ளது பிரமதேவனது சத்தியலோகம். இவ்வே ழுலகங் கட்கும் மேலே உள்ளது, திருமாலினது வைகுந்தம். அதற்கும் மேலே உள்ளது உருத்திரலோகம். என்றால், தேவர்

களும், இந்திரனும், மாலயனும் எத்துணைப் பெருமையுடையர் என்பது விளங்குகின்றதன்றோ? இவர்கள் அனைவரும் கான் நின்றும், வற்றியும், புற்றெழுந்தும் காணப்படாத சிவபெருமான், இவள் இருக்குமிடத்தில், தானே வந்து அருள்செய்தான் என்றால், அதனை இவள் வியந்து போற்றுதல் சொல்லவேண்டுமோ!

மேற்கூறியவாறு தேவர் முதலியோர்க்குக் காணப்படாத பெருமான் இவள்பால் தானே எழுந்தருளிவந்தான் என்றால், அதற்குக் காரணம், இவள் பல பிறப்புக்களில் அப்பெருமானை நோக்கிப் பயன் குறியாது செய்த தவமேயாகும். அங்ஙனமாயினும் இவள், தன்னைத் தேவரினும் மேம்பட்ட தவமுடையவளாக நினைத்துச் செருக்கடையவில்லை. மற்று என்ன நினைக்கின்றாள்? சிவபெருமானது கருணைக்குச் சிறிதும் தகுதியில்லாத இழிவுடையவளாகவே தன்னை நினைக்கின்றாள். அதனால், தன்னை, "நாயேனை" எனக் கூறிக்கொள்கின்றாள். 'நாயேன்' என்பது, 'நாய் போன்றயான்' என்பதாம். நாயினிடத்துக் காணப்படும் இழிவுகள் பல. அதனால், இழிவுக்கு நாயை எல்லையாகக் கூறுதல் ஒரு மரபு.

தகுதியற்ற நாய்போன்ற தன்னை இறைவன் தானே வந்து ஆண்டது எவ்வாறு என்னும் வினவிற்கு இவள் கூறும் விடை, "தாய்போல்" என்ற ஒன்றேயாம். 'தாய்க்குத் தன்மகவு எத்துணை அசுத்தமுடையதாயும், குறையுடையதாயும் இருப்பினும் அதன்பால் வெறுப்புத் தோன்றாது, அன்பும், இரக்கமும் உளதாவது போலவே, நான் எத்துணை இழிந்தவளாய் இருப்பினும், எம்பெருமானுக்கு என்னிடம் வெறுப்புத் தோன்றாது கருணையே மிகுந்தமையின், தானே வந்து அருள்செய்தான், என்று இதனால் கூறினாள். 'வந்து செய்த திருவருளும் சிறிதன்று; பெரிது' என்றற்கு, "தலையளித்திட்டு" என்றாள். அளித்தல் - அருள் செய்தல். தலையளித்தல் - பெரிதும் அருள்செய்தல்.

இங்ஙனம் இறைவன் தலையளிசெய்தமையால், கற்போலக் கிடந்த தனது நெஞ்சம் கனலிடைப்பட்ட மெழுகுபோல உருகும் தன்மை எய்தி அன்பே வடிவாய் நின்றமையை, "ஊன் வந்து உரோமங்கள்" என்றும் "உள்ளே உயிர்ப்பு எய்து"

என்றும் கூறினுள். "அளித்திட்டு" என்றது, 'அளித்தலால்' என்றபடியாம். 'உரோமங்கள் ஊன் வந்து, என்று மாற்றப் படும். ஊன் வந்து - உடம்பின் மேலெழுந்து "வந்து" என் றதை, (வர) எனக் கொள்க. உயிர்ப்பு - பெருமூச்சு. இதுவும் அன்பினுல் உண்டாவது. எய்து - எய்துதற்குக் காரணமான இதனை, "கழல்" என்பதனேடு கூட்டுக.

அன்பு தோன்றினுல் இன்பம் தோன்றுதல் இயல்பாதலின் அந்த இன்பத்தை,"தேன்வந்து அமுதின் தெளிவின்"என்ருள்."தேன்" என்றது, இனிமையை தெளிவின் – தெளிவைப்போல இதுவும்' 'அமுதின் தெளிவின் தேன்வந்து' என மாற்றுதற்கு உரியது.

இவ்வாறு இனிய திருவருளைப் பொழிந்த பெருமானுக்கு அவனது திருவடிகளைப் புகழ்ந்து பாடுதலொழிய யான் செய்வது யாதுளது என்பாள். "ஒளிவந்த வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானுய்" என்ருள். ஒளிவந்த – ஒளிமிகுந்த. "ஒளி" என்றது, ஞானத்தையும் குறித்தது. வான் வந்த – பெருமை பொருந்திய.

இங்ஙனம் இவள் இறைவனது பெருங்கருணைத் திறத்தை நினைந்து உள்ளமும், உடலும் உருக அன்பே வடிவமாய் இன் பத்தில் திளைத்திருக்கும் நிலையைப்பாடி, அம்மனையை எறிந் தாள் என்க.

———

(தொடரும்)

---

சென்ற இதழ் பக்கம் 480-ன் தொடர்ச்சி

வரு + கரன்–வருவித்த செய்கையை உடையவன். கரம் – செய் வது. கை. வசை – இழி சொற்கள் அலர்– பழிச்சொற்கள். அருகு + அரனே – அருகர் ஆகிய சமணர்களை அழித்தவனே. அரன்- அழிப்பவன். இசை - புகழ். மருள்– வியப்பு. தரும் + அருளே– திருவருளே புரிவார். தமிழ்விரகன்–தமிழில்ஆர்வம் மிகுந்தவன்; இது ஞானசம்பந்தருக்கு ஒரு திருப்பெயராக வழங்கும். 'தமிழ் + விரகன் + அ + மொழி' என்னும் தொடரில், அகரம் ஆரும் வேற்றுமை உருபு. 'மொழி' என்பது ஈண்டு இத்திருப்பதிகத் தைக் குறித்தது, இடர்–துன்பம். 'திடம் + ஒழி + ஏ' ஏகாரம் ஈற்றசை. 'ஒழி'–ஒழிதல்; முதல் நிலைத் தொழிற்பெயர். 'இடர் திடம் ஒழியே'–'இடர்கள் ஒழிதல் திடம்'; துன்பங்கள் நீங்குதல் நிச்சயம் என்பது கருத்து. (12)

———

# திருமந்திரம் TIRUMANTIRAM

## ஆறுந்தந்திரம் Tantra the Sixth

டாக்டர், திரு. பா. நடராசன் அவர்கள் M. A., D. Litt.,

---

மலர் 18, இதழ் 10-ன் தொடர்ச்சி

### குருவும் சிவமும் ஒன்றே
### The Guru - God identity

9. குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே.

Guru is none but Siva - thus spaketh Nandi
Guru is Siva himself - this they realiseth not
Guru will to thee be Siva, and thine Guide too
Guru in truth is the Lord that surpasseth all speech and understanding.

குருவே சிவமென நந்தியெம்பெருமான் அருளினன். ஆயினும் குருவே சிவமென்பதைத் தெளிவாகப் பலர் உணர்ந்திலர். குருவே இறைவனுமாகவும், வழிகாட்டியாகவும் நிற்பான். உரையும் உணர்வும் கடந்த தலைவனாக அமைபவனும் குருவே யாகும்.

வரி – 3. கோன் – வழிகாட்டும் தலைவன்.
4, கோ – இறை.

### சிவனை சிந்திப்போர் சிவமாவர்
### Think of Siva and be Siva

10. சித்தம் யாவையுஞ் சிந்தித்திருந்திடும்
அத்தன் உணர்த்துவ தாகும் அருளாலே
சித்தம் யாவையுந் திண்சிவ மானக்கால்
அத்தனும் அவ்விடத் தேயமர்ந் தானே.

Let all thine thoughts be thoughts of Siva,
And the Lord by His Grace shalt reveal all;
An thine thoughts be Siva - saturated
In thee shalt He then close abide.

நுமது சிந்தனை யாவும் சிவன் பாலதாகுக. அவ்வாறு ஆகையில், அருளால் எல்லா ஞானத்தையும் இறைவன் உணர்த்துகின்றான். சிந்தனை அனைத்தும் சிவமயமாகும்போது, சிவனும் உம்முள்ளே நிலையாக இடம்பெற்று விடுகின்றான்.

### நந்தியின் குறிப்பறிவாரில்லை
### They Know not Nandi's intent

11. தானந்தி சீர்மையுட் சந்தித்த சீர்வைத்த
கோனந்தி யெந்தை குறிப்பறி வாரில்லை
வானந்தி யென்று மகிழு மொருவற்குத்
தானந்தி யங்கித் தனிச் சுடராமே.

Of himself he besought me in Truth's way
He the blessed, the King of Kings, Nandi, mine Father,
But they know not his intent;
To them that rejoiceth in him as the Nandi of heavenly might,
Verily is he the peerless luminence of crimson twilight fire.

புகழ்கொண்ட எந்தையாம் நந்திப்பெம்மான் தானாகவே விரும்பி சிவஞான நெறியிலே என்னைச் சந்தித்தான். ஆனால் அவன் உள்ளக்குறிப்பை உலகோர் அறிவதில்லை. வலிமிகுந் தோனே என்று போற்றி மகிழ்வாருக்கு அவன் மாலையில் ஏற்றிய தீபம் போல் ஒளி காட்டுகின்றான்.

வரி - 1. தானந்தி = தான்+நந்தி - தானே விரும்பி.
2. குறிப்பறிவாரிலலை - முன் 9-ம் பாட்டில் "குருவே சிவமெனக் கூறினன் நந்தி" என்பதை ஓர்க.
3. வானந்தி = வால்+நந்தி - வலிமை மிகுந்த நந்தி; வெள்ளேறு எனினும் ஆகும்.
தானந்தி = தான்+அந்தி - இங்கு அந்தி என்பதற்கு மாலைக் காலம் என்பது பொருள். இருள் வருவதை முன்னிடச்சுட்டியது.

(தொடரும்)

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்

## உரைநடை



பாலகவி வயிநாகரம்,

திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,

தேவகோட்டை.

(மலர் 18. இதழ் 10-ன் தொடர்ச்சி)

பைங்கட் சிறைக்கால் கடைக்கால் செயக்கிரிகள்
விரிசிறை படைத்தெழுவபோற்
படருந்தன் வேகத்தி னெக்கப்பறக்கப்
பறந்தலைச் செந்தலையறும்
வெங்கட் டயித்திய ருடற்குறை தலைக்குறை
விரைந்துயி ரினைத்தொடர்ந்து
மீச்செல்லு மாச்செல் லெனச்செலப் பூமாரி
விண்டூர்ப்ப தெனவுடுவுகப்
பொங்கற் கடற்குட்ட மட்டதிக் குந்தமிற்
போர்செயப் பார்கவிழவெம்
பொறியுடற் சேடன் படந்தூக்கி யார்க்கும்
புகைப்படலம் வடவாமுகச்
செங்கட் பசுந்தோகை வாம்பரி யுகைத்தவன்
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. 95

பசிய கண்களையுடைய சிறகுகளினுல் உண்டாகிய காற்று, கடையூழிக் காலக் காற்றைப்போல விச அதனுல் மலைகளெல் லாம் விரிந்த சிறகுகளைப் பெற்று மேலே எழும்புவன போலப் பொருந்துகின்ற வேகத்துடன் ஒக்கப் பறந்துசெல்லவும் போர்க் களத்தில் கொடிய கண்களையுடைய அசுரர்களது சிவந்த தலை யற்ற உடற்குறையும், உடலற்ற தலைக்குறையும் பிரிந்து சென்ற தமது உயிரைத் தொடர்ந்து மேலே செல்லுகின்ற பெரிய மேகத்தைப் போலச் செல்லவும், பூமழை வானத்திலிருந்து

தூர்ப்பது போல நட்சத்திரங்கள் கீழே விழவும் பொங்குகின்ற ஆழமாகிய கடல், எட்டுத்திக்குகளிலும் தம்மிற் கலந்து போர் செய்யவும், பூதலங் கவிழ்ந்து விழவும், கொடிய புள்ளிகளை யுடைய உடலைக் கொண்ட ஆதி சேடன் படமெடுத்து நிறைக் கின்ற புகைப்படலத்துடன் வடவைத் தீயை யொத்த சிவந்த கண்களையுடைய பசிய மயிலாகியதாகவும் குதிரையைச் செலுத் தியவனே! சிறு தேரை உருட்டி யருளுவாயாக. எல்லாச் செல் வங்களும் பெருகும்படி தழைக்கின்ற கந்தபுரியில் எழுந்தருளி யுள்ள இளங்குமரனே! சிறு தேரை உருட்டி அருளுவாயாக.

நெய்வைத்த கூந்தற் பிடிக்குதவ நாற்கோட்டு
நிகளத் தடங்குன்றுவான்
நிமிருங் கதிர்க்குலைச் செந்நெலைப் பாகுபடு
நெட்டிலைக் கன்னல்கொலெனுக்
கைவைத் திடப்பரி முகஞ்செய்து வெய்யோன்
கடும்பரியை நட்புக்கொளும்
கழனிவிரி காவிரித் திருநாட கற்பகக்
காட்டிற் பிறந்துபிரியா
மெய்வைத்த காதன்மை யரமகளிர் பேராய
வெள்ளந் திளைத்தாடியோர்
மென்னடைக் கேக்கற்ற பிடிபின் பிடிக்கமுலை
வேழங்க ளுடனுலாவும்
தெய்வப் பிடிக்குக் கிடைத்ததொரு மழகளிறு
சிறுதே ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவள ரிளங்குமர
சிறுதே ருருட்டியருளே. 96

நெய் பூசப்பெற்ற கூந்தலையுடைய பெண்யானைக்குக் கொடுத்துதவுதற்காக நான்கு கொம்புகளையும் கால்தளையையும் உடைய பெரிய பெரிய மலை போன்ற ஐராவதம், வானத்திற் சென்றுயர்ந்த கதிர்க்குலைகளையுடைய செந் நெற்பயிரை பாகு பொருந்திய நீண்ட இலை களையுடைய கரும்பென்று நினைத்துக் கைவைத்திழுக்க, அப்பயிர் குதிரை முகம் போன்ற தோற்றங் கொண்டு கதிரவனது விரைந்த செலவையுடைய குதிரைகளு

(தொடர்ச்சி அடுத்த பக்கம் பார்க்க)

# ஞானப்பழம்

புலவர், திரு. வே. அரசு அவர்கள்,
தமிழாசிரியர், எளச்சிபாளையம்.

(மலர் 18, இதழ் 10. பக்கம் 497ன் தொடர்ச்சி)

---

கருங்காலிக் கட்டைக்கு நாணுக்கோ டாரி
இருங்கதலித் தண்டுக்கு நாணும் — பெருங்கானில்
காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்தோற்ற
ஈரிரவுந் துஞ்சாதென் கண்,

கருங்காலிக் கட்டையையும் கூசாமல் வெட்டி வீழ்த்து கின்ற கோடரி, வாழை மரத்தைப் பிளப்பதற்கியலாமல் கூசு கிறது. பெரிய காட்டிலே கரிய எருமைகளை மேய்க்கின்ற இந்த இடைச்சிறுவனுக்குத் தெரிந்ததுகூட எனக்குத் தெரியாமல் போய்விட்டதே. இச்சிறுவன் அழகும், இளமையும், அறிவும் பெற்றவனாக விளங்குகின்றானே. இவன் யாரோ? — என்று நினைத்துப் பின்னர் அவனை நோக்கித் "தம்பி! நீ யாரப்பா?" என்று கேட்டார். அப்பொழுது இளைஞன், "என்னைத் தெரிய வில்லையா பாட்டி? இங்கே பார் என்னை" என்று கூறித் தன் வடிவழகைக் காட்டி நின்றான். அப்பெருமானுடைய கோடி சூரியப் பிரகாச அழகிலே மயங்கித் தன்னை மறந்து நின்றார் ஔவையார். அவர் மூலமாக சில உண்மைகளை உலகுக்குணர்த்

---

(முன்பக்கத்தொடர்ச்சி)

டன் நட்புக்கொள்ளுகின்ற வயல்கள் நிறைந்த காவிரித் திரு நாட்டை யுடையவனே! கற்பகமரச் சோலையில் தோன்றி விட்டு நீங்காத உண்மை யன்பு பூண்ட தேவமகளிரின் பெரிய கூட் டப் பெருக்கில் மூழ்கி, ஒப்பற்ற மெல்லிய நடைக்கு ஏக்கற்ற பெண்யானை பின்னே பிடிக்கக் கொங்கைகளாகிய யானைகளு டன் உலாவுகின்ற தெய்வயானைக்குக் கிடைத்த ஒரு இளங் களிறே! சிறு தேரையுருட்டி யருளுவாயாக. எல்லாச்செல்வங் களும் பெருகும்படி தழைக்கின்ற கந்தபுரியில் எழுந்தருளி யுள்ள இளங்குமரனே! சிறு தேரை உருட்டியருளுவாயாக.

---

(தொடரும்)

தவும் ஔவையின் புலமையைத் தெரியப்படுத்தவும் விரும்பிய குமரக்கடவுள் அரியது, பெரியது, கொடியது, இனியது எனப் பல நீதிகளைக் கேட்டுப் பாடல் பாடச் செய்து கேட்டுவிட்டு மறைந்தருளினர். புலமைப் பழமாகிய ஔவைக்கு எளிய பொருளால் ஞானம் தந்து, பழமாகக் காட்சிதந்து மறைந்தார்.

பொன்போலும் கள்ளிப் பொறிபறக்கும் கானலிலே
செல்லும் புலவர்முன் சென்றுகவி கேட்டுப்
பொழியுங் கவிமழையாற் பாடென்னை என்று
மொழிந்தது ஞானப் பழம்.

ஔவையாரைப் போலவே பொய்யாமொழிப் புலவருக்கும்; அவர் வேண்டாமலிருக்கும் பொழுதில் தாமாகவே வந்து அருள் செய்தார்.

பொய்யாமொழிப் புலவர் சிறந்த சிவபக்தர். சிவமே பெருந்தெய்வம் என்ற எண்ணம் உடையவர். அவருடைய கனவிலே முருகன் இளைஞனாகத் தோன்றி, "முருகனைப்பாடும்" என்றார். ஆனால், புலவரோ, "கோழியைப் பாடிய வாயால் குஞ்சைப் பாடமாட்டேன்" என்று மறுத்துவிட்டார். புலவருக்குக் கோழியாவார் சிவபெருமான்; குஞ்செனிலோ முருகக் கடவுள் சிவனைப் பாடியவாயால் சிறுவன் முருகனைப் பாடமாட்டேன் என்று கூறிவிட்டார்.

ஒருசமயம், தஞ்சாக் கூரை ஆண்டுவந்த அரசன்மேல் தஞ்சைவாணன் கோவை என்னும் நூலொன்று பாடி எடுத்துக் கொண்டு அம்மன்னனைக் காணச் சென்றுகொண்டிருந்தார். வழியிடையே ஒரு கொடிய பாலைநிலம். அங்கே, ஒருவேடன் கையில் அம்பும் வில்லும் தாங்கி எதிர்ப்பட்டான். பொய்யாமொழிப் புலவரைத் தடுத்து "உம்மிடம் உள்ள எல்லாப் பொருளையும் கொடுத்துவிடும். இல்லையேல் இந்த அம்பு உம் உடலைப் பதம் பார்த்துவிடும்" என்றுகூறினன். புலவரோ, "என்னிடம் செல்வப்பொருள் ஏதுமில்லை. கல்விப்பொருள்மட்டும் சிறிது உள்ளது" என்றார். "ஓகோ. அப்படியானால் நீர் ஒரு புலவரோ? சரி என்பெயரைவைத்து நன்றாய் இரங்கலாக ஒரு பாட்டுப் பாடும் பார்ப்போம்" என்றான் வேடன். "அப்படியே ஆகட்டும். உன்பெயரென்ன?

"என்பெயர் முட்டை" - வேடனின்பெயர் கேட்டறிந்த புலவர்,

"பொன்போலும் கள்ளிப் பொறிபறக்கும் கானலிலே
என்பேதை செல்லற் கியைந்தனளே — மின்போலும்
மானவேல் முட்டைக்கு மாருய தெவ்வர்போம்
கானவேல் முட்டைக்கும் காடு"

— என்றுபாடினர். அப்பாடலைக் கேட்டவேடன் பலமாகவாய் விட்டுச்சிரித்தான். புலவரே! நீர் பொய்யாமொழி புலவரல்லர். பொய் ஆம் மொழிப்புலவர். பாடலிலே தவறு இருக்கின்றதே. பொன்னைப்போல் சிவந்த நெருப்புப் பொறிமிகுந்து கள்ளிச் செடிகளும் பற்றி எரியும் காட்டிலே கருவேலமுள் எவ்வாறு எரிந்துபோகாமல் இருந்திருக்கும். தவறு, தவறு. இதோ! நான் பாடுகிறேன். கேளும்"

விழுந்ததுளி அந்தரத்தே வேமென்றும் வீழின்
எழுந்து சுடர்சுடுமென் றேங்கி — செழுங்கொண்டல்
பெய்யாத கானகத்தில் பெய்வளையும் சென்றனளே
பொய்யா மொழிப்பகைஞர் போல்.

"ஆகா! அருமையான பாட்டு" என்ருர் புலவர். "கோழியைப் பாடிய வாயால் குஞ்சைப் பாடமாட்டேன் என்ற புலவர் நீர் தானே!"

"ஆமாம்"

"குஞ்சு பெரிதா? முட்டை பெரிதா?"

"குஞ்சு தான் பெரியது."

"அவ்வாருயின் குஞ்சைப் பாடும்"

"என்னைப் பற்றி இவ்வளவும் தெரிந்து கொண்டுள்ள நீர் யாவர்?"

"என்னைத் தெரியவில்லையா? நான் தான் கோழிக்குஞ்சு"

"முருகா! உன் அருளே அருள்!"

வந்தாய் எனைத்தேடி; வந்தெனக்கு மெய்ஞ்ஞானம்
தந்தாய்; எளிதோநின் தண்ணளியே! — எந்தாய்
இறக்கும் பொழுதினிலு மின்னிசைப் பாட்டால்
மறவே னுனைப்பாட நான்.

ஔவையாரும்; பொய்யாமொழியாரும் வேண்டாமலேயே முருகனுல் அருளப் பெற்றவர்கள். ஆனுல், குமரகுருபரரும், அருணகிரியாரும் முருகனே வேண்டி அருள்பெற்றவர்கள். இறைவன் முருகன் அவர்களுக்கு எவ்வாறு ஞானத்தை வாரி வழங்கினுன் என்று கண்டுகொண்டு தந்தைக்குபதேசம் செய்த கந்தனின் பெருமையை மேலும் காண்போம்.
மெய்யன்பர்களே!

மூங்கைச் சிறுவன் மொழிபேசா வந்நாளில்
தீங்கவி பாடும் குருபரனுய்ச் செய்ய
புவிசிறந்த செந்தூர்க் கடற்கரையில் நின்று
நவின்றது ஞானப் பழம்.

ஸ்ரீவைகுண்டம் என்னும் கயிலாயபுரத்தில் சண்முக சிகாமணிக் கவிராயர், சிவகாமி அம்மையார் என்பவர்களுக்குத் திருச்செந்தூர் குமரப்பெருமான் — கந்தக் கடவுளருளால் பிறந்த குழந்தை குமரகுருபரன். ஆனுல், பிறந்த பொழுது முதல் அழுவதும் சிரிப்பதுமாகிய எந்தவித உணர்ச்சியுமில்லாமல் அக் குழந்தை இருந்து வருவதைக் கண்டார்கள் பெற்ருேர். காலப் போக்கில் குழந்தை பேசும், சிரிக்கும் என்றெலாம் எண்ணி ஏங்கி யிருந்தார்கள்.

ஆனுல், குழந்தையோ வாய் பேசா மூங்கையாயிருந்தது. எதிர்காலத்தில் நம்பிக்கை வைத்து அக்குழந்தையை ஐந்து வயதுவரை வளர்த்த பெற்ருேர்கள், இனியும் அதன் துன்ப நிலையைக் காணவிரும்பாதவர்களாகிக் குழந்தையை அழைத்துக் கொண்டு திருச்செந்தூர் முருகன் ஆலயத்திற்கே சென்று குமரகுருபரனின் ஊமைத் தன்மை நீங்கினுலொழியத் தாம் ஆலயத்தை விட்டு வெளிப்பட இயலாது எனக்கூறித் தவம்கிடந்தனர். நாளும் காலையில் நீராடி இறைவனைத் தொழுது பொழுதைப் போக்கினர். ஒருநாள், முருகப்பெருமான், சிறுவன், ஊமைக் குழந்தையின் கனவிலே தோன்றினுர். குழந்தையின் ஊமைத் தன்மை நீங்க அருள்புரிந்தார். அவனைநோக்கிக் "குருபரா! எழுந்திராய்!" என்று கூற அக்குழந்தையும் "அடியேன்" எனமறுமொழி புகன்றது. உறக்கம் தெளிந்தெழுந்த குமரகுருபரன் தன் தாய் தந்தையரை பாதங்களைத் தொட்டு

எழுப்பி அழைத்துச் சென்று நீராடிவிட்டு ஆலயத்தினுள் வந்து நின்று கந்தப்பெருமானின் முன்னிலையில் கைகுவித்து வாய் திறந்து,

பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையும் — தேமேவு
நாதமும் நாதாந்த முடிவும் நவைதீர்ந்த
போதமும் காணாத போதமாய் — ஆதிநடு
அந்தங் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தந் தணந்த பரஞ்சுடராய் — வந்த
குறியுங் குணமுமொரு கோலமுமற் றெங்கும்
செறியும் பரம சிவமாய் ... .... .... ... ... ... ... .... ... ...
... ... .... .... .... .... .... .... ... ... .... ... .... ... — ....…
இம்மைப் பிறப்பி லிருவா தனையகற்றி
மும்மைப் பெருமலங்கண் மோசித்துத் — தம்மைவிடுத்
தாயும் பழைய வடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச் சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்
டடியேற்கு முன்னின்றருள்.

—என்று வேதவேதாந்தக் கருத்துக்களை யெல்லாம் வாரியிறைத்துப் பாமாலை பாடிமுடித்தார். அப்பொழுது, முருகப்பெருமான், குமரகுருபரன் வாணெலியாக இருந்து "குழந்தாய்! இன்று முதல் உன்பெயர் குமரகுருபரன் என்று வழங்கட்டும்" என்று மொழிந்து மறைந்தார்.

(தொடரும்)



# WHAT IS PLEASURE?

**Thiru. R. Srinivasa Iyer Avergal,**
Tirupanandal.

Such of those who have read Johnson's "Rasseles" may perhaps argue that there is no real pleasure anywhere in the world. The young prince Rasseles and his sister Pekuah are tired of their princely life at the palace. Pleasure has ceased to please them. They go about the world to see where real pleasure is and where real contentment lies. Ultimately, they return to the palace greatly baffled. During all their rounds, they see that the King and the peasant, young and the old, Rich and poor, abled and the disabled have some discontentment or other and have something to worry about.

But our Hindu Religion (சமயம்) asserts that real pleasure exists and can be achieved. What that pleasure is and where it is to be found is the question. All of us like happiness-otherwise called pleasure. Pleasure is the talk everywhere. We derive pleasure by sight, by hearing, by eating, by smelling and by touching etc. Therefore pleasure is the happiness derived through our eyes, ears, nose, tounge and body. Eyes etc. are only the means to the end. Our sastras say that these are the five organs (பொறிகள்). These organs catch hold of certain things. Those things are called புலன்கள். The sense or feeling that we realise or derive during this process of the organs catching

hold of the புலன்கள் is called pleasure. We experience a sense of frustration if ever there is any hindrance or impediment or there is any slip between the cup and the lip during the process of deriving this pleasure. That thing is called trouble or displeasure.

The trials of human beings are two fold. One lies in deriving pleasure and the other in warding off pain. Of these two, pleasure consists not only in our achievement of it. It is equally there in driving pain. Real pleasure therefore is only in the combination of the two. Man tries to get these two things. Man does not mind suffering when he is in quest of pleasure. In foundries, he touches the red-hot iron. He walks in solidifying snow. With heavy heart he sails in boisterous sea. With least hesitation he leaps down from considerable height. Why all this? It is only because he is mad after pleasure, by gaining name and fame by these acts.

Where is this pleasure which maddens the Pandits, the illiterates and the saints? One sits and eats without mental or physical labour. He does not relish food. Neverthless he forces himself to eat at morning eight, at noon, and at night eight with a tiffin in between. He eats not because he is hungry, but he eats only to keep up time and the habit. The most delicious dish, looks only a poison to him. In contrast another toils and moils for eight hours. He digs, he reads, and he sings. Hunger pinches his stomach. He gets his food. Ah! what a pleasure! His stomach prepares itself to receive his meal even before it should come to him Salaiva pours out to diseminate the food! He eats with avidity. We see therefore that real pleasure follows only a certain amount of suffering.

The lotus rejoices in the morning sun only after a certain amount of withering in the dew over night.

Life therefore, is worth its name in discarding pain and deriving pleasure. Man works from morning till evening only for this. The man who labours hard, seeing the man who sits idly and eats thinks, "What? he has a stomach just like mine. Why should I toil and moil, when he sits at ease and eats" Immediately conflict commences, the mind begins to war. His thoughts rebel. He musters men. A revolution begins. Chaos Commences and the Country's peace is at stake. Even in the midst of this revolution, he longs for pleasure. But is it in his making? No. Some external force is necessary. Some strong power must aid him. That unseen power is God. It is omnipotent. The capacity to see HIM both during pleasure and pain, at all times and at all places is gained only by SAMAYAM or religion or principle.

It is only the samayam (சமயம்) that keeps the wandering mind at rest. It helps you to keep off jealousy, anger and lust and remain at peace. It fosters kindliness, discarding selfishness. In real Samayam (சமயம்) there is no competition or rivalry, jealousy or hatred, richness or poverty like or dislike. Pleasure pervades always.

"The fight as your God is big, My God is big' is the thorn in the field of real Samaya. There cannot be any dampness before a huge fire. Just like that, before God there is no place for any difference, discrimination and lowliness.

Nor religion (Samayam) on earth dictates to you to be poor or suffer from hunger or to spend what ittle you have on God and undergo suffering even for

food. But on the other hand, it asks you to work, earn, eat and be happy. It does not deny your freedom of life. It only requires you to be a slave to knowledge, but not for power or wealth. We are not slaves to anybody; we do not fear yama, God of death. (நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்,,)is the dictum.

No religion asks you to be a fool always without a burning desire for progress, improvement of knowle-dge and research. But on the other hand, it asks you to read and read. The more you read, the more you are able to cultivate humility and bending manners. No religion prevents you from your engaging yourself in researches. But research does not mean work in a laboratory breaking test tubes and pipettes.. Nor does it consist in atomic research. It is in yourself research. You must be able to know how much of religious faith is required for the country.

Civilisation is born in nature, and brought up in nature. There cannot be any civilisation without religion. Even in religion there must be discipline. Life, if not well disciplined, will be gloomy and dark. Life. if not well planned before hand, will lead you into deep waters and bring unto you all sorts of misery and humiliation.

From morning till you retire to bed in the night, you must adhere to certain religious rites and principles. Sastras envisage these principles. You are asked to get up at 5' 0 clock in the morning, to concentrate your thoughts on God, bathe in the pure cold water, dress in clear cloths, and take in pure food. Are these not advices in the right direction for your hygienic elevation? Education, economy and health are the underlined aim of religion. Love and righteousness are

alone religion. In true religion (samayam) there is not discrimination between high and low, rich and poor, yours and mine; All things belong to all Persons; All for each and each for all. That is real socialism.

Knowledge is quite essential to man. Man without knowledge is a thorn in the society. He will be looked upon with disdain by all and spurned by them. Knowledge is power and power is knowledge. God resides in the heart of men of knowledge.

Therefore we must learn religious truths and obtain Godliness and salvation. That is pleasure.



உ

திருச்செந்திலாண்டவன் துணை

# திருவாசக அநுபூதி உரை*

(சீகாழித் தாண்டவராயர் அவர்கள் இயற்றியது)

திருச்சிற்றம்பலம்

## அருட் பத்து

இனி, அருட்பத்து :

பொழிப்புரை:— முற்பதிகத்தில் திருவடி ஞானமான அன்பு நிட்டை பெற்றபின், அற்ற போத விறுதியே அடிமை வழிபாடு வணக்கமான இன்ப மாயாதீத சுக வுல்லாச அன்பெனக் காண்க.

திருப்பா, ஆசிரிய விருத்தமாகத் திருப்பெருந்துறையிலோதிய தெனக் காண்க :

இனி, எச்சோதிக்கு மேலான சிவஞானச் சோதியின் திறத்தைக் கூறும் ( தி.-ன. ):—

சோதியே சுடரே சூழொளி விளக்கே
    சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
    பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
    நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே அடியே னாதரித் தழைத்தால்
    அதெந்துவே என்றரு ளாயே.

(இ-ள்). சுவாமி! என் அறிவில் விளங்கும் ஞானமே! ஞானானந்தப் பிரகாசமே! சருவ வியாபக உயிர்க்குயிராய், அறிவுக் கறிவான விளக்கமே! ஞானக்கோதையும் பேரின்ப தனமுமுடைய அம்மைபாகனே! பரப்பிரமமே! நீறணி கடவுளே! திருமாலயன் காணாத் திருவருள் நீயே! ஞானச்செல்வோய்! திருப்பெருந்துறையாகிய உள்ளக் கோவிலில்; சைதனியக் குருந்த விருட்ச வியாபக அடியிலெழுந்தருளிய அநாதி சிவமே! அடியேன் அன்பாற் பூசித்துத் துதித்தழைத்தால், திருநோக்கருளாமல் என்ன பராமுகம்மா? கருணை செய்ய வேண்டுமென வருளியது.

---

* இவ்வரிய நூலைப் பதிப்பித்த சென்னை-திருவான்மியூர், மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் நூல் நிலையத்தாரின் அனுமதிபெற்று இது வெளியிடப் பெறுகின்றது. இதன் விலை ரூ. 10/- அந் நூல் நிலையத்தில்கிடைக்கும், 20% கழிவு உண்டு.

# "திருவெண்காடர்"

'முத்தமிழ்' ஆசிரியர்,

திரு. பண்டித நடேசனுர் அவர்கள், B. A., J. P.,

கௌரவ மாகாண நீதிபதி, சென்னை. – 7

---

[21-7-67 வெள்ளிக்கிழமையன்று திருவொற்றியூர் பட்டினத்தார் கோயிலில் திருவெண்காடர் திருநட்சத்திர விழா மிகச் சிறப்பாக மேல் சட்டசபை தலைவர், திருவாளர், எம். ஏ. மாணிக்கவேலு நாயகர், அவர்கள் B. A., B. L., M. L. C. தலைமையிற் கொண்டாடப்பட்டது. அவ்வமயம் நிகழ்த்திய தொடக்கவுரை இது.]

காவிரி புகும் பட்டினமே புகார் எனப்படும். அப்பூம் புகாரினையே பழங்கால மக்கள் "பட்டினம்" என்ப. கடற் கரையில் துறைமுகம் பெற்ற இடத்தைப் பட்டினம் என்றும் ஆற்றங்கரையிலே வேறு இடத்திலோ துறையில்லாததையே பட்டணம் என்றும் மலைகளுக்கு மத்தியிலுள்ள பட்டணத்தையே நகரம் (நகத்தால் சூழப்பட்டது) என்றனர் பண்டையோர். காவிரிப்பூம் பட்டினத்தில் வேளாண்குடிச் செட்டிமாரில் பிரபல வியாபாரியாக விளங்கிய திருவெண்காடரையே "பட்டினத்தார்" என்று மக்கள் அழைத்தனர். இவர் கி. பி. பத்தாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். ஆடி மாதம் உத்திராட நட்சத்திரத்தன்று முத்தி அடைந்தார். ஆண்டிற்கொருமுறை வரும பௌர்ணமி வெள்ளிக்கிழமை. இன்று இத்தினத்துல் காலை, பகல், மாலை வேளைகளில் கொடியிடை நாயகியைத் திருமுல்லைவாயிலிலும் திருவுடை நாயகியை மீஞ்சூரடுத்த மேலூர் கிராமத்திலும் வடிவுடைநாயகியைத் திருவொற்றியூரிலும் தரிசிப்பது வழக்கம். பேய்க்கரும்பு இனித்த இடமே சுவாமிகளின் முத்திஸ்தலம். அவ்விடமே திருவொற்றியூர். வடஇந்தியாவில் பெயர்பெற்ற நாளந்தா சர்வகலாசாலை போல் வடமொழிக் கல்லூரியையும் தமிழ்க் கல்லூரிகளையும் பெற்று விளங்கிய மிகப்பழைமையான பட்டினம் திருவொற்றியூர். இதனையடுத்து விளங்கியதே

எண்ணாயிரம் சர்வகலாசாலை. தென்னாட்டில் மிகப் பிரசித்திப் பெற்ற பெரும் பட்டினம் திருவொற்றியூரே. திருவாரூர், காஞ்சி புரம், திருவொற்றியூர் மூன்றும் பிருதிவிஸ்தலம் எனலாம். இம்மூன்றிடங்களிலுள்ள மூலவர் புற்றிடங்கொண்ட நாதராக வுள்ளார். பிறந்ததும் பேறுபெற்றதும் பட்டினங்களாக விளங் கியதால் இத்திருவெண்காடர் பட்டினத்தார் என்று அழைக்கப் பட்டார்.

## பட்டினத்தார் கண்ட ஒற்றியூர்

"வாவி எல்லாம் தீர்த்தம்; மணல் எல்லாம் வெண்ணீறு
காவதங்கள் எல்லாம் கணநாதர் — பூவுலகில்
ஈது சிவலோகம் என்று என்றே மெய்த்தவத்தார்
ஓதும் திருவோற்றியூர்".

தரித்திர நிலைமையாலும் மனைவி மக்கள் தீயநெறியாலும் செல்வம், இளமை, யாக்கை நிலையாமை அறிந்த உணர்ச்சி யாலும் ஒருவர்க்குத் துறவு ஏற்படலாம். நவகோடி செல்வம் பெற்றும் துறவியானதால் திருவெண்காடரை முற்றும் துறந்த பட்டினத்தார் என்ப. இவ்வடிகளார் தாம் கண்ட சிவானுபவங் களையே பாடல்களாகப் பாடினார். இவர்தம் பாடல்கள் தமி ழுக்கே ஒரு கருவூலம் எனலாம். இவரது துறவு பற்றி இருவித கொள்கை உண்டு. பட்டினத்தார் புராணத்தில், 'தெய்வநாத னாகிய மருத வாணனே காதற்ற ஊசியையும் நூல் துண்டொன் றையும் பட்டினால் சுற்றிப் பெட்டியிலிட்டு முத்திரையுடன் தம் வளர்ப்புத் தாயராக விற்றிருந்த சிவகலையிடம் கொடுத்து மறைந்தார்" என்று கூறியுள்ளது. "காதற்ற ஊசியும் வாராது காணும் கடைவழிக்கே" என எழுதிய ஓலையைக் கொடுத்தார் என்பது கர்ண பரம்பரை செய்தியாகும்.

## பட்டினத்தார் போற்றிய துறவு

"அறந்தான் இயற்றும் அவனிலும் கோடி அதிகம் இல்லம்
துறந்தான்; அவனி சதகோடி உள்ளத் துறவுடையோன்;
மறந்தான்; அறக்கற்று அறிவோடு இருந்து இருவாதனை அற்று
இறந்தான் பெருமையை என் சொல்லுவேன் கச்சி ஏகம்பனே"

— திரு ஏகம்பமாலை.

துறவிகள் நான்கு வகைப்படுவார்கள்; குடிசன், பகூதன், ஹம்சன், பரமஹம்சன் எனும் நால்வர்; இந் நால்வரும் நிலையாமை நோக்கித் துறந்தவர்கள். இவர்கள் இறுதி நிலையையே "உருவருவச் சித்தி" (முத்தி நிலையிற் கலத்தல்)என்பது. பரமஹம்சன் என்பவனே கடவுளைக் கண்ட மகாஞானி எனப்படுவான். இம்மகாஞானியையே "மறந்தான் அறக்கற்று இருவாதனையற்றவன்" என்றார் பட்டினத்தார். "அறம் எனப்பட்டதே இல்வாழ்க்கை" என்று திருவள்ளுவனியம் கூறினும் பட்டினத்தார் ஒழுக்கத்தையே "அறம்" என்றார். 'ஒழுக்கம் விழுப்பம் தரலால் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்' எனும் திருக்குறளைப் போற்றியே முற்றும் துறந்த பட்டினத்தார் 'ஒழுக்கமே - அறம்' என்றார். போன உயிர் உடலில் புகாதது போல் ஒழுக்கங்கெட்டவன் என்றும் தாழ்ந்தவனே. எனவே உயிரினும் ஓம்பப்பட வேண்டுவது ஒழுக்கமே.

ஒழுக்க சீல முடைய இல்லறத்தானை விட வீட்டை விட்டுக் காட்டை அடைந்த துறவி மேலும் கோடி அதிகம் புண்ணியம் பண்ணியவனாவான். இல்லறத்தான் ஒரு கோடி புண்ணியவான் எனில் வீட்டை விட்டவன் இரு கோடி புண்ணியவான். காரணம்; வீட்டை விட்டுத் துறவியாகலாம்; ஆனால் துறந்தவனை வீடு விடாது; அவன் நெஞ்சில் குடியிருக்கும். முற்றும் துறந்த முனிவர்க்கும் மக்கள் மேல் காதல் மாறாதன்றோ? ஆதலால் "உள்ளத் துறைவுடையோன் அவனில் சதகோடி" என்றார் பட்டினத்தார். இருவினைகளை அடியோடு விட்டுப் பிறப்பு இறப்புக்களை (இருவாதனை) க் கடந்தவனே மகாஞானி. இத்தகைய நீத்தார் பெருமையை அளவிட்டுக் கூறமுடியாது என்றார் பட்டினத்தார். எனவே அடியேனும் பட்டினத்தார் பெருமையைக் கூறமுடியுமோ?

### சிவனே சூத்திரதாரி

"நல்நாரிற் பூட்டிய சூத்திரப்பாவை நல்நார் தப்பினால்
தன்னாலும் ஆடிச் சலித்திடுமோ அந்தத்தன்மை யைப்போல்
உன்னால் யானும் திரிவது அல்லால் மற்றுன்னைப் பிரிந்தால்
என்னால் இங்கு ஆவதுண்டோ இறைவா! கச்சி ஏகம்பனே"

உயிர்களின் தாமாக இயங்கும் வலியின்மையையும் உயிர்களின் செயலின்மையையும் இறைவனது சர்வ வியாபகமும் வியந்து

கூறினர் பட்டினத்தார். பொன்னால் பிரயோஜனம் பொன் படைத்தவனுக்கு உண்டு; ஆனால் பொன் படைத்தவனால் பொன்னுக்கு யாதேனும் பலனுண்டோ? இல்லை. அதுபோலவே சிவனால் ஆவதுண்டே ஒழிய மனிதனால் என்னசெய்ய முடியும். நடராஜ பெருமான் ஆடினால் உலகம் உண்டு;இல்லையெனில் இல்லை. ஆதலால், "அறமார் புகழ்தில்லை அம்பல வாணர் அடிக்கமலம் மறவாது இரு மனமே! அது காண் நல்மருந்து உனக்கே" என்றும் "அம்பல வாணர்தமைப் போற்றாதார் ஏற்றாலும் பிச்சை கிடையாமல் ஏக்கற்றிருப்பார்கள் என்றும்" என்றார் அடிகள்.

கண்ணுடைய வள்ளலாரும் தாயுமானாரும் போற்றியவர் பட்டினத்தார். இவர்தம் சீடரே சேந்தனார். சேந்தனார் பாடியதே திருவிசைப்பா. இருவரது பாடல்களும் பதினோராம் திருமுறையில் உள்ளன. சைவசமய உலகின் கவிதைக் கருவூலம் அவை. சிவச்சுவை, கவிச்சுவை, பெற்றன; சிவானுபவக் கவிதையமுதம் எனலாம்; எனவே சித்தர் ஞானக்கோவையிலும் உள்ளன.

திருமுறையிலுள்ள பட்டினத்தார் பாடல்களுக்கும் ஞானக் கோவையிலுள்ள செய்யுட்களுக்கும் வேறுபாடு உண்டெனல் உண்மையே. ஆனால் வேறொரு பட்டினத்தார் பாடியன ஞானக் கோவையில் இருப்பன என்பதே ஆய்வுக்குரியது. திருவள்ளுவப் பயனில் உள்ளகாமத்துப்பாலே மிகவினியது. ஆதலால் வேறொரு வள்ளுவன் பாடியது எனல் பொருந்தாது. ஆசிரியர் தம்அறிவும் அனுபவமும் ஆற்றலும் காலத்திற்கேற்ப மாறும்.

> "வித்தாரமும் கடம்பும் வேண்டா! மடநெஞ்சே,
> செத்தாரைப் போலே திரி"

சிவானுபவ சித்தி வேண்டுமெனில் செல்வ வித்தாரமும் செருக்கும் காட்டக் கூடாது, உலகினரோடு உறவு கொள்ளக்கூடாது. தாயுமானார் கூறுதற்போல் மனிதன் 'சார்வான்'களால் கெடுகின்றான். "Be dead to the world" ஆங்கிலேயரும் இக்கருத்தையே கூறுவர். அவர் தம் வாழ்க்கையில் காலத்தை வீணுக்கப் பலரோடு பழகார்; அறிமுக மற்றவரோடு பேசவும் மாட்டார். இது ஒரு நற்பழக்கமே!

"கிழவருமாய் நோய் மூப்புக் கீழ்ப்பட்டுக் காமத்து
உழவரும் போய் ஒயுமாறு கண்டோம்"

மேற்கண்ட வாசகத்தைச் சர்வ மதத்தினரும் சம்மதிப்பர். இவ்விரண்டடிகளையே பல வடிகளாகக் கொண்டு உடற் கூற்று வண்ணத்தைப் பாடினார் பட்டினத்தார். சிலோத்துமம் மேலோங்க நரை திரைகள் உண்டாகின்றன. சிலோத்துமம் பித்தத்தைச் சார உணவு செல்லாது; சப்த தாதுக்கள் நிலை தளரும். பித்தம் வாதத்தை நெருங்கின் கண்ணொளி கெடும்; சுவாசம் மேனோக்கின் காது மந்தப்படும்.

இருபதாம் வயதில் இளமை சுகம் உண்டு. ஆனுவ் வளர்ச்சி குறையும். முப்பதாம் வயதில் அழகு கெடும். நாற்பதாம் வயதில் அறிவு கெடும். "நாற்பதில் நாய்க் குணம்" என்பது பழமொழியன்றோ? ஐம்பதில் தேக வலிமை குறையும். அறுபதில் தாதுக்கள் கெடும். எழுபதில் கண்கள் கெடும். எண்பதில் செவிப்புலன் கெடும். தொண்ணூறில் மனம் கெடும். நூற்றாண்டில் சீவனும் நீங்கும். இவ்வுண்மைகளைக் கருத்திற் கொண்டே "ஒயுமாறு கண்டோம்" என்றார் பட்டினத்தார். இத்தகைய வாழ்வினை மறந்து மக்கள் எத்தனையோ கோடி எண்ணத்துடனும் மனச் செயலுடனும் வாழ்கின்றனர். "பெரும் பாம்பு சிறு பாம்பினை விழுங்கக் காலம் பார்த்திருக்கையில் அச் சிறு பாம்பு தேரையைக் கவ்வியது போல் என்னைக் கொல்ல இயமன் பல பிறவியின் கண்ணோக்கமாவிருக்க அடியேன் என் அவல வயிற்றை வளர்க்க எத்தனையோ பாவங்களையும் பழிகளையும் செய்கிறேன்" என்பதை சுருக்கி "ஒரு வயிறு ஓம்புதற்குப் பல்லுயிர் செகுத்து வல்லிதின் அருந்தி" என்றார் பட்டினத்தார்.

## துறவுக்கு மூலம்

"காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே"

—பட்டினத்தார்

மனப்பக்குவம் மாந்தர்க்கு வித்தியாசப்படும். அவ்வேற்றுமை நால்வகைப்படும்; மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம். என்பன படிநிலைகள். வாழைத்தண்டில் நெருப்பு பிடிப்பது 'மந்ததரம்' என்றும் ஈரவிறகில் தீ பிடிப்பது 'மந்தம்' என்றும்

உலர்ந்த கட்டையில் நெருப்பு பிடிப்பது 'தீவிரம்' என்றும் கரி யில் தீ பிடிப்பது 'தீவிரதரம்' என்றும் கூறுப. கற்பூரத்தில் தீ பிடிப்பது போன்ற மனப்பக்குவமே பட்டினத்தார் பெற்ருர்; காதற்ற ஊசியும் வாராது எனப்படித்ததும் முற்றும் துறந் தார்.

காதற்ற ஊசியும் நூலும் நமக்குச் சிலஉண்மைகளை உப தேசிக்கின்றன. காது உள்ளபோது நூல் ஏறும்; காதற்ற போது நூல் நுழையாது. காதுக்கும் நூலுக்கும் சம்பந்தம் உண்டு; அச்சம்பந்தமே ஞான சம்பந்தம் தரும். 'காற்றுள்ள போதே தூற்றிக் கொள்' எனில் உயிரிருக்கும் போது இறைவனை வழிபட்டு உய்க என்பது பொருள். அதைப்போலவே காது (உடம்பு: சினையாகுபெயர்) நன்ருக இருக்கும்போதே சான்ருேர் அருளிய உயர்ந்த நூலின் கருத்துக்களைக் கற்க வேண்டும். ஞானம் பெறக் கற்றலினும் கேட்டலே நன்று. "கற்றிலனு யினும் கேட்க" என்கிறது தமிழ் மறை. பஞ்சேந்திரியங்களில் காது ஒன்றே முற்றும் திறந்துளது. பிரவண ரூபம் பெற்றுள் ளது. இறைவன் புகழை இரண்டு காதுகளில் நிரம்ப கேட்க வேண்டும். ஒரு வாயும் இரண்டு காதுகளும் நாம் பெற்றுள்ள தற்குக் காரணம் உண்டு: கொஞ்சம் பேசுக; அதிகம் கேட்க என்பதே அதன் உட்கருத்து. காதினைச் சுத்தம் செய்ய சிலர் நூலிட்டுக் குடைவர்; மனச்சுத்தத்துக்கு நூலே காரணம். மனக் கோட்டம் போக்கும் காரணத்தாலன்ருே சுவடி, நூல் எனப்பட் டது. ஞானசம்பந்தரும் "தோடுடைய செவியன்" என்று செவி யையே சிறப்பித்தார்.

"பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப்போல்
ஆரும் துறக்கை அரிதரிது"
—தாயுமானுர்.

# திருவாசகத்தில் ஒரு பெருவாசகம்

முன்னுரை :

திருவாசகம் தமிழிலுள்ள தலைசிறந்த சமயநூல் என்பதனை அனைவரும் அறிவர். ஓதுபவர் உள்ளத்தை யெல்லாம் கொள்ளை கொண்டு, கருங்கல் மனத்தையும் கரைந்து கசிந்து உருகும்படி செய்வதில், திருவாசகம் ஈடு இணையற்றது என்பதனை வாழை யடி வாழையாக வந்த சான்றோர்கள் அனைவருமே, தத்தம் அனு பவத்தில் கண்டுணர்ந்து போற்றிக் குறிப்பிட்டுள்ளனர். அண் மைக் காலத்து அருட்பெருஞ் சான்றோராகிய இராமலிங்க அடி களார், "சாத்திரங்களில் சிறந்தது திருமந்திரம், தோத்திரங் களில் தலைசிறந்தது திருவாசகம்" எனப் பலகாலும் அன்பர் களுக்கு அறிவுறுத்துவாராம். இதனால் திருவாசகத்தின் சிறப்பு எத்தகையது என்பதை, நாம் ஒருவாறு நன்கினிது தெளியலாம்.

சிறந்த திருப்பாடல் :

அத்தகைய அரும்பெரும் சிறப்பு வாய்ந்த திருவாசகத்தில் பல சிறந்த அரிய பாடல்கள் உள்ளன. அவற்றுள்,

இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றுந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை அன்றியொன் றில்லை
யாருன்னை அறியகிற் பாரே.

எனவரும் அழகிய இனியபாடல், திருவாசகப் பாடல்களிலேயே மிகமிக முதன்மையான, விழுமிய முழுமணி போன்ற பெருநலம் சான்றதாகும். இதனைத் திருவாசகத்தின் 'இருதய சுலோகம்'

---

'திருக்கோயில்' ஆசிரியர் அனுமதி பெற்று இக்கட்டுரை பிரசுரிக்கப் படுகிறது.

என்றும் கூறலாம். தொட்டனைத்தூறும் மணற்கேணி போலக் கற்றனைத்தூறும் பற்பல சிறந்த நுண் பொருள்களைத் தன்ன கத்தே பொதிந்து கொண்டு, பொலிந்து விளங்குகின்றது இவ் வரிய சிறந்த திருப்பாடல்!

பாடலின் பொருள் :

திருவாசகத்தில் 'கோயிற்றிருப்பதிகம்' என்னும் பகுதியில்; 'அநுபோக இலக்கணம்' கூறும் பாடல்களுள் ஒன்றாக, இப் பாடல் அமைந்துள்ளது. இதன்கண் மாணிக்கவாசகப் பெரு மான், இறைவன் தமக்கு அருள் செய்ததனையும்; மலத்தைப் போக்கித் தம் அறியாமையை நீக்கியதனையும்; தம்முடைய உள்ளத்தில் ஞான ஒளியைப் பரப்பும் சூரியனாகத் தோன்றி நிலைபெற்ற இயல்பினையும்; அத்தகைய இறைவனின் அருட் பெரும் இயல்புகளைத் தாம் நினைப்பற நினைந்து போற்றி வரு தலையும் குறிப்பிட்டருளுகின்றார். இறைவன் அணுவினும் மிக மிக நுண்ணியனாய் எல்லாப் பொருள்களிலும் கலந்து நின்று இயக்கிவரும் அத்துவித இயல்பும்; உலகிலுள்ள உயிர்ப்பொருள் உயிரில் பொருள்கள் (சத்து, சடம்) என்பவை இறைவன் இயக் கினால் அன்றி இயங்க மாட்டாமையும்; அங்ஙனம் யாவற்றை யும் இயக்கும் இறைவன் அவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட அதீத நிலையில் விளங்கும் தன்மையும்; அத்தகைய இறைவனை உயிர்கள் தம்முடைய முயற்சியினால் சுட்டறிவு கொண்டு அறிதல் இயலாது என்னும் உண்மையும்; இப்பாடலின்கண் நன்கினிது விளக்கப்பட்டு இருக்கின்றன. இப்பாடலின் ஒவ் வொரு சொல்லும் மிகமிக ஆழ்ந்து ஆராய்ந்து நுனித்து உணர் தற்கு உரியதாக அமைந்துள்ளது.

"இந்நாளில் எனக்கு அருள் புரிந்து, என்னுடைய அறி யாமையாகிய இருளைப்போக்கி, மனத்தின்கண் வெளிப்படுகின்ற சூரியனைப்போல வெளிப்பட்டு நிலைபெற்ற நின்னுடைய சிறந்த இயல்புகளை இடைவிடாமல் எப்பொழுதும் நினைந்து துதிக்கும் பேற்றை யான் பெற்றேன். உன்னையல்லாமல் வேறொரு பொருளும் இல்லாதபடி, எல்லாப்பொருள்களிலும் கலந்துகலந்து அணுத்தன்மைப்பட்டு நுணுகி நுணுகி, எங்கும் ஒரு தன்மை யாய் விரவி நிற்கும் ஒப்பற்ற பொருளாகத் திருப்பெருந்துறை

யின்கண் உறைகின்ற சிவபெருமானே! காணப்படும் பொருள் களுள், நீ ஒரு பொருளும் ஆகமாட்டாய். ஆயினும் உன்னை அல்லாமல் ஒரு பொருளும் இயங்குவதில்லை. இத்தகைய நின்னை அறியும் வல்லமை உடையவர்கள் உலகில் யாவர் உளர்? ஒரு வரும் இலர்''.

என்பது இப்பாடலின் திரண்ட பொருள்.

(1) 'இன்று' என்றது, சிவபிரான் திருப்பெருந்துறையில் குருந்த மர நிழலில் ஆட்கொண்டருளிய புனிதநாளை உணர்த்து கின்றது எனக் கொள்ளலாம். மாணிக்கவாசகப் பெருமான் ''மெய்யே உன் பொன்னடிகள் கண்டு இன்று வீடுற்றேன்''; ''பெருந்துறையின் மேய பெருமான் பிரியாது இருந்து உறையும் என் நெஞ்சத்து இன்று''; ''இன்று எனக்கு ஆரமுது ஆனாய் போற்றி''; ''களித்தனன் உன்னைக் கண்ணுறக்கண்டு கொண்டு இன்றே'' என, இன்று என்னும் சொல்லைப் பல இடங்களில் வழங்கி அருளிச் செய்திருத்தல் காணலாம்.

(2) 'எனக்கு அருளி' என்னும் தொடரில், 'எனக்கும்' என்ற இழிவு சிறப்பு உம்மை மறைந்து நின்றது. 'எனக்கு' என்னும் சொல், தம்முடைய சிறுமைகளை எல்லாம் தொகுத்துச் சுருக்கி உணர்த்தும் வகையில் அருளிச் செய்யப்பட்டதாகலின், அஃது 'இசை எச்சம்' எனக் கொள்ளப்பெறும்.

(3) 'இருள் கடிந்து' என்றது, இறைவன் தமக்கு ஞானோ பதேசம் செய்து அறியாமையைப் போக்கியருளிய பேருதவியை வியந்தவாறு. 'குற்றங் கடிதல்' என்றாற்போல 'இருள் கடிதல்' என்று குறிப்பிட்ட திறம் உணர்ந்து இன்புறற்பாலது.

(4) இருளைப் போக்குதலும், ஒளியைப் பரப்புதலும் ஞாயிற் றின் செயல். அம்முறையில் தமது அறியாமை இருளைப் போக் கித் தமக்கு ஞான ஒளியைக் கொடுத்தருளியமை பற்றி, அடி களார் இறைவனை ஞாயிறு என வியந்து போற்றினார். நக்கீரர் பெருமானும், முருகனை ஞாயிறு என விளக்கியிருத்தல் இங்குக் கருதற் பாலது. மாலையில் மறையும் சூரியனை விலக்கி, ஒளி மிகுந்த அழகிய காலைக் கதிரவனை உணர்த்துவதற்காக 'எழு கின்ற ஞாயிறு' என்றார். 'ஞாயிறே போன்று' என்பதில்

ஏகாரம் பிரிநிலை: சந்திரன் விண் மீன்கள் ஆகிய பிற ஒளிப் பொருள்களை விலக்கியது.

(5) சூரியன் கிழக்குக் கடலில் அல்லது உதய மலையில் தோன்றுவதாகக் கூறுவது கவி மரபு. அந்தப் பௌதிக சூரியனை விலக்கி ஞான சூரியனாகிய இறைவனையே சுட்டி உணர்த்த 'உள்ளத்து எழுகின்ற ஞாயிறு' என விதந்து கூறினார். இனி, 'உள்ளத்து' என்பதனை 'எழுகின்ற' என்னும் சொல்லோடு சேர்த்துக் கொள்ளாமல், 'உள்ளத்து நின்ற நின் தன்மை' எனவும் கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளலாம். இறைவன் உலக மெங்கும் வியாபித்திருந்தாலும் அன்பர்களாகிய ஞானிகளின் உள்ளத்திலேயே நிலை பெற்றுத் தங்கி வீற்றிருக்கின்றான் என்பது வேதாகமங்களின் முடிபு. அஃது இங்கே குறிப்பிடப் பட்டதாகக் கொள்ளலாம். "பெருந்துறையின் மேய பெருமான் பிரியாது இருந்து உறையும் என் நெஞ்சத்து இன்று" எனவும், "இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" எனவும் மணிவாசகர் கூறுதல் காண்க.

(6) 'நின்ற' என்னும் சொல் காலவழுவமைதி. 'நிற்கின்ற' எனும் பொருளில் வந்தது. "முக்காலத்தினும் ஒத்தியல் பொருளைச் செப்புவர் நிகழும் காலத்தானே" என்பது நன்னூற் சூத்திரம். 'மலர்மிசை ஏகினான்' எனத் திருவள்ளுவர் இறந்த காலத்திற் குறிப்பிட்டதும், ஆசிரியர் பரிமேலழகர் அதனைக் காலவழுவமைதி என்று விளக்கி யிருப்பதும், இங்கே சிந்தித்து இன்புறுதற்குரியன.

(7) 'நின் தன்மை' என்பது இறைவனின் உயர்வற உயர்ந்த பெரு நலங்களையும், அத்தகைய, இறைவன் தம் பொருட்டு எளி வந்து இரங்கிப் புரிந்தருளிய எல்லையற்ற பேரருள் உதவிகளையும், தொகுத்து உணர்த்தும்.

(8) 'நினைப்பற நினைந்தேன்' என்னும் தொடர், இப்பாடலில் மாணிக்க வாசகரால் முதன் முதலிற் புதிதாகப் படைத்து வழங்கப் பெற்ற அருமை மிக்க—ஓர் அழகிய இனிய—பொருள் பொதிந்த சொற்றொடர் எனலாம். 'நினைப்பு' என்பது மறப்பின் பின் நிகழ்வது. மறந்ததை நினைப்பதும், நினைந்ததை மறப்

பதும் நம்மனோர்க்கு இயல்பு. மாறி மாறி அடுத்தடுத்து நிகழும் நினைப்பு மறப்புக்கள் இல்லாதபடி, எப்பொழுதும் இடைவிடாமல் நினைந்து இறைவனைத் தியானித்துக் கொண்டு, அவனோடு ஒன்றியிருக்கும் திருவருட் பேற்றினை எய்தப் பெற்றமையினால், 'நினைப்பற நினைந்தேன்' என்று அருளிச் செய்தார். இதனைச் 'சாக்கிர அதீத நிலை' எனச் சைவ சித்தாந்த நூல்கள் கூறும்.

பொற்புறு கருவி யாவும்
புணராமே அறிவு இலாமைச்
சொற்பெறும் அதீதம் வந்து
தோன்றுமே தோன்றி நின்ற
சிற்பரம் அதனால் உள்ளச்
செயல் அறுத்திட உதிக்கும்
தற்பரம் ஆகி நிற்றல்
சாக்கிர அதீதம் தானே.

எனச் சாக்கிர அதீத நிலையின் இயல்பை, உமாபதி சிவாசாரியார் தாம் இயற்றிய சிவப்பிரகாசம் என்னும் சைவ சித்தாந்த நூலில், விளக்கியிருத்தல் காணலாம்.

'நினைப்பற நினைந்தேன்' என்னும் இவ்வரிய தொடரின் அருமைப் பாட்டை மிகவும் வியந்து, கவிஞர்கள் பலரும் தத்தம் கவிதைகளில் தழுவிப்போற்றிக் கொண்டுள்ளனர். தென்முகக் கடவுள் பற்றிய துதியில், அவர் 'சொல்லாமல் சொன்னவர்' என்றும், அவரை 'நினையாமல் நினைந்து' நாம் தொழுதல் வேண்டும் என்றும், பரஞ்சோதிமுனிவர் குறிப்பிட்டிருத்தல் காணலாம். இவ்வாறே கவிஞர் ஏறு ஆகிய கம்பரும், மண்டோதரியைப் பற்றிக்குறிப்பிடும் இடத்தில், அவள் இராவணனை 'நினைந்ததும் மறந்ததும் இலாதநெஞ்சினாள்' எனச் சுட்டியிருத்தலும் கருதுதற்குரியது. மாணிக்க வாசகர் இத்தொடரை அருளிச் செய்ததற்கு,

உள்ளுவன் மன்யான் மறப்பின்; மறப்பறியேன்
ஒள்அமர்க் கண்ணாள் குணம்
உள்ளினேன் என்றேன்; மற்று என்மறந்தீர்? என்று என்னைப்
புல்லாள் புலத்தக் கனள்.

என்பன போன்ற அரிய திருக்குறள்களே அடிப்படையாகும் என்பது, ஆராய்ந்து உணர்ந்து சுவைக்கத் தகுவதாகும்.

(9) 'நீ அலால் பிறிது மற்று இன்மை' என்னும் தொடர், இறைவன் இவ்வுலகப் பொருள்கள் எல்லாமாகவும் விளங்கும் தன்மையை உணர்த்துகின்றது. 'எல்லாம் சிவன் என்ன நின்ருய் போற்றி' என்பது திருநாவுக்கரசர் தேவாரம். ஞானிகள் இவ்வுலகப் பொருள்களை எல்லாம் சிவ மயமாகவே காண்பர். எவ்விடத்திலும் எல்லாப் பொருள்களிலும் சிவத்தைக் காண்பதும், எல்லாவற்றையும் சிவ மயமாகவும் சிவச் செயலாகவும் கொள்ளுவதும் ஞானிகளின் இயல்பு. இந்நிலையினை எய்தும் தன்மையே ஞானப்பேற்றிற்கு அறிகுறியாகும்.

பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தோர்
பரமே பார்த்திருப்பர்;
பதார்த்தங்கள் பாரார்... ... ... ... .... ... ...;
சீவன்முத்தர் சிவமே கண்டிருப்பர்

எனவரும் சிவஞான சித்தியார் செய்யுளுக்கு ஏற்ப, மாணிக்க வாசகர் எல்லாம் சிவமயமாகக் காணும் நல்லாராக விளங்கப் பெற்றதனை 'நீ அலால் பிறிதுமற்று இன்மை' என்னும் தொடர், தெளிவுறப் புலப்படுத்துகின்றது.

(10) 'சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து' என்னும் தொடர், இப்பாடலில் மிக முதன்மை வாய்ந்த ஒரு சிறந்த தொடராகும். இந்நாளைய அணு ஆராய்சி (Atomism) பற்றிய அறிவியல் உண்மைகளை, இத்தொடர் குறிப்பிடுவதாகக் கொண்டு நாம் மகிழ்தல் கூடும். கவிஞர்கள் தம்முடைய தொலை முன்னோக்கு உணர்வு (Prophetic Vision) கொண்டு, இத்தகைய உண்மைகளை முன் கூட்டியே உணர்ந்து நமக்கு அறிவுறுத்துதல் உண்டு. ஷேக்ஸ்பியர் தம்முடைய 'பெரும் புயல்' (The Tempest) என்னும் நாடகத்தில் வரும் 'ஏரியல்' (Ariel) என்னும் ஏவலனை, இந் நாளைய மின்னாற்றல் (Electricity) என்பதனையே முன்னராக உணர்ந்து குறிப்பிட்டிருக்கின்ருர் என்றெல்லாம், மேலைநாட்டுத் திறனாய்வாளர்கள் விளக்குவது இங்கு நாம் இயைபு பற்றிக் கருதி உணரத் தகும்.

---

(தொடரும்)

# தில்லைவாழந்தணர் ஆவணி புரட்டாசி ஆடல் வல்லான் அபிஷேகப் பரிசு நிதி முதற்பொருள் ரூ. 1,000/-



'பரசிருக்கும் தமிழ்மூவர் பாட்டிருக்கும் திருமன்றிற் பரசோன் றேந்தி அரசிருக்கும் பெருமானுர்'

ஆகிய தில்லைக்கூத்தப்பெருமான் கொள்ளும் ஆறு அபிஷேகங்களுள், ஆவணி புரட்டாசி மாதங்களில் ஸ்ரீ நடராஜப்பெருமானுக்கு அபிஷேகத் தொண்டு புரியும் தில்லைவாழந்தணர்க்கு அபிஷேகப் பரிசுகள் அளித்தற் பொருட்டு இத்தருமம் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்றது. இது 'தில்லைவாழந்தணர் ஆவணி, புரட்டாசி ஆடல்வல்லான் அபிஷேகப் பரிசு நிதி' எனப்பெயர் பெறும்.

2. இதற்குரிய முதற்பொருள் ரூ. 1000/– / ஓராயிரம் / இது இந்திய யூனிட் டிரஸ்டில்/ Unit Trust of India/முதலீடு செய்யப்பெற்றுள்ளது. சர்டிபிகேட் எண் 1070101504-10006 –101ஏ. 013788. இது நம்மாலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்களாலும் பரிபாலனம் செய்யப்பெற்று வரும்.

3. நம்மால் சிதம்பரத்தில் நிறுவப் பெற்றுள்ள தருமங்கள் விவரம்:–

| | | முதற்பொருள் ரூபாய். |
|---|---|---|
| | **1. பிரசங்கம்** | |
| 1. | பெரியபுராணப் பிரசங்க நிதி | 7,000 |
| 2. | திருவாசகப் பிரசங்க நிதி | 7,000 |
| | **2. சைவசித்தாந்தம்** | |
| 3. | ஸ்ரீ அருள்நந்தி சிவாசாரியார் நினைவு சிவஞான சித்தியார் உபந்நியாசக் கட்டளை /அண்ணுமலைப் பல்கலைக்கழகத்தில்/ | 15,000 |
| 4. | அண்ணுமலைப்பல்கலைக்கழகத்தில் சைவசித்தாந்த உபகாரச் சம்பளம் அளிக்க | 30,000 |

### 3. கல்வி

5. சிதம்பரம் உயர்நிலைப்பள்ளி மாணவர்க்கு
உணவு நிதி 35,000

### 4. அன்னம்பாலிப்பு

6. மார்கழித் திருவாதிரை, ஆனி உத்திரநாட்களில் 12,000
7. சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் ஆவணிமூல
அன்னதானம் 60,000
8. தில்லைவாழந்தணர் அன்னம்பாலிப்பு
/நிலப்பெறுமானம்/ 1,50,000
9. ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவு நித்தியமகே
சுவர பூஜை /நிலப்பெறுமானம்/ 1,00,000
10. ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அன்னம்
பாலிப்பு /வைகாசி அமரபக்ஷம் திருதியை/ 20,000
11. மார்கழித் திருத்தேர்விழா மகேசுவர பூசை நிதி 5,000
12. மார்கழித் திருத்தேர்விழா தில்லைவாழந்தணர்
விசேட அன்னம்பாலிப்பு 10,000
13. ஆனித் திருமஞ்சனம் ஷெ 10,000
14. தில்லைவாழந்தணர் தை மாச விசேட அன்னம்
பாலிப்பு /ஒருநாள்/ 2,500
15. தில்லைவாழந்தணர் விசேட அன்னம்பாலிப்பு,
மாசி, பங்குனி, சித்திரை /ஒருநாளில்/ 7,500

### 5. திருமுறை

16. பல்லாண்டு விளக்கு நிதி 5,000
17. மாணிக்கவாசகர் நினைவுத் திருவாசகப்பரிசு 5,000
18. ராஜராஜ அபயகுலசேகரசோழன் நினைவுத்
தேவாரவைப்பு நிதி /கட்டடங்கள்/ 16,000
19. தில்லையில் ஆடிச் சுவாதியில் இன்னிசைத்
தேவார நிதி 25,000

### 6. பொது

20. திருப்பல்லாண்டு, சிவபுராணச் சலவைக்கல்
பதிப்பு தேர்ச்சிலை, தேர்க்கொட்டகை, ஒலிபெருக்கி
வகையரு 14,500

| | | |
|---|---|---|
| 21. | ஸ்ரீ நடராச சபைக்கதவு, அருகால் வெள்ளித்தகடு கூலி வகையரு | 11,000 |
| 22. | ஸ்ரீ நடராசப்பெருமான் கோயில் ஆயிரக்கால் மண்டபத் திருப்பணிக்கு நன்கொடை | 5,000 |
| 23. | நடராசப்பெருமானுக்குத் தங்கத் தாம்பாளம் | 4,500 |
| 24. | திருநீலகண்டர் நினைவுத் தண்ணீர்ப் பந்தர் நிதி | 3,500 |
| 25. | பொன்னம்பலத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நெய்விளக்கு நிதி | 30,000 |
| 26. | தில்லை வாழந்தணர் மார்கழித் திருவாதிரைத் திருமஞ்சனப் பரிசு நிதி /ஆனித் திருமஞ்சனமும்/ | 5,000 |
| 27. | தில்லைவாழந்தணர் படிக்காசு நிதி /நித்தியப்படி/ | 7,000 |
| 28. | தில்லைச் சிவகங்கைக்கரையில் திருவாசக சிலாசாசனம் | 20,000 |
| 29. | தில்லைவாழந்தணர் /பூசைமுறை/ தங்குவதற்கு கயிலைவிலாஸ் | 5,000 |

இவற்றுள் மேல்/ 26ஆகக்/ குறிக்கப்பட்டுள்ள தரும சாசனத் தின்படி ஆனித் திருமஞ்சன நாளிலும், மார்கழித் திருவாதிரை யன்றும் தில்லைவாழந்தணர்களுக்குத் திருமஞ்சனப்பரிசு அளிக் கப்பெற்று வருகின்றது.

அங்ஙனமே இம்முதற்பொருளினின்று ஆண்டுதோறும் கிடைக்கும் வருமானத்தில் இருந்து சிதம்பரம் ஸ்ரீ நடராஜப்பெரு மானுக்கு /1/ ஆவணி வளர்பிறைச் சதுர்த்தசி சாயரட்சையிலும் /2/ புரட்டாசி வளர்பிறைச் சதுர்த்தசி அர்த்தஜாமத்திலும் நடத் தப்பெறும் அபிஷேகங்களில் ஸ்ரீ நடராஜப்பெருமானுக்கு அபி ஷேகப் பணிபுரிந்து விசேஷ அபிஷேக ஆராதனைப் பணிகள் புரியும் தில்லைவாழந்தணர்க்கு அதாவது ஆவணி மாதத்து ஷ்டி நாளில் அபிஷேகப் பணிபுரிந்தார் ஒருவருக்கும், புரட்டாசி மாசத்து ஷ்டி நாளில் அபிஷேகப் பணிபுரிந்தார் ஒருவருக்கும் ஆக இருவருக்கு அபிஷேகப் பரிசு அளிக்கப்பெற்று வரும்.

4. இம்முதற்பொருளினின்று கிடைக்கப்பெறும் வரு மானத்தொகையில் இத்தருமத்தை நடத்துவதற்குரிய நிர்வாகச் செலவு போக எஞ்சியுள்ள தொகையைச் சரிபாதியாகப் பிரித்து

டி இருவருக்கும் அபிஷேகப் பரிசாக அளிக்கப்பெற்று வரும். உத்தேசப் பரிசுத் தொகை தலைக்கு ரு. 30–00, ரூபாய் முப்பது ஆகும். ஆண்டுதோறும் வரும் வருமானத்திற்கேற்பப் பரிசுத் தொகை குறைக்கவும் கூட்டவும் பெறும்.

5. மேலே குறிப்பிட்ட தருமம் வேறு எம்முறையிலும் மாற்றியமைக்கப் பெறமாட்டாது. இம் முதற்பொருள் நம் பேரிலும் நமக்குப் பின் உரிமையுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும். இம்முதற்பொருள் திரும்பியளிக்கப்பெறின் அதிக வட்டி தரக் கூடிய அரசியல் கடன்தாள்களிலோ அல்லது நிலையான முதலீடுகளிலோ முதலீடு செய்யப் பெறும்.

ஆடினும் நறுநெய்யொடு பால்தயிர்
அந்தணர் பிரியாத சிற்றம்பலம்
நாடினும் இடமா நறுங்கொன்றைநயந்தவனே — சம்பந்தர்

Tirupanandal
Dated 28-9-1967 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran.*

Registered at Tiruvadamarudhur Sub Registrar's office on 4-10-67 as No. 42 of 1967. Book No. 4 volume No. 54 pages, 119 to 122.

உ

திருப்பனந்தாள் — ஸ்ரீ காசி மடம்

# ‘ திருமுறை வெளியீடுகள் ’

| எண் | நூல் | | ரூ. | பை. |
|---|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை (அச்சில்) | ... | | |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | | 3 | 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 | 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம் மட்டும் புதிய பதிப்பு) | | 2 | 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் .. | ... | 2 | 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் .. | ... | 1 | 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) | ... | 0 | 65 |
| 8 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த காசிக் கலம்பகம் மூலமும் அரும்பதக்குறிப்பும் | ... | 0 | 40 |
| 9 | .. சிதம்பர மும்மணிக்கோவை மூலமும் அரும்பதக்குறிப்பும் | ... | 0 | 20 |
| 10 | ஒன்பதாம் திருமுறை–திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் தெளிவுரை | ... | 1 | 50 |
| 11 | .. .. மூலம் மட்டும் | ... | 0 | 56 |
| 12* | பதினோராந் திருமுறை (புதிய பதிப்பு) .. | ... | 1 | 50 |
| 13* | பெரியபுராணம் (மூலம் மட்டும்) | ... | 3 | 00 |
| 14 | பெரியபுராணம் (உரை நடை) | ... | 2 | 00 |
| 15 | திருத்தொண்டர் புராணச்சாரம் | ... | 0 | 40 |
| 16* | அகத்தியர் தேவாரத் திரட்டு | ... | 0 | 36 |
| 17 | திருவிளையாடற் புராணம் (மூலம் மட்டும்) | ... | 3 | 00 |
| 18 | திருவிளையாடற்புராணம் உரை நடை | ... | 2 | 25 |
| 19 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம் மட்டும்) | ... | 1 | 75 |
| 20 | கந்தபுராணம்–முதல் மூன்று காண்டங்கள் (மூலம்மட்டும்) | | 2 | 75 |
| 21 | .. யுத்த தேவ காண்டம் | ... | 2 | 00 |
| 22 | .. தக்ஷகாண்டம் | ... | 1 | 50 |
| 23 | கந்தபுராண உரைநடை .. | ... | 3 | 00 |
| 24 | திருக்குறள் அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 | 50 |
| 25 | திருக்குறள்–பொருட்பால் .. | ... | 2 | 50 |
| 26 | திருக்குறள் – காமத்துப்பால் .. | | | |
| | ஷை 24, 25, 26 திருக்குறள் 3புத்தகமும் | ... | 4 | 00 |
| 27 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் (அச்சில்) | | | |
| 28 | தாயுமானசுவாமிகள் பாடல் குறிப்புரையுடன் | ... | 1 | 25 |
| 29 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 | 25 |
| 30 | திருக்கைலாய ஞானவுலா–உரையுடன் | ... | 0 | 50 |
| 31 | கந்தர் அலங்காரம் குறிப்புரையுடன் | ... | 0 | 25 |
| 32 | கந்தரனுபூதி மூலம் (அச்சில்) | | | |
| 33 | கந்தரனுபூதி தெளிவுரை | ... | 0 | 35 |
| 34 | கந்தர்கலி வெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புகளுடன் (அச்சில்) | | | |
| 35 | கந்தர்கலி வெண்பா மூலம் மட்டும் | ... | 0 | 10 |
| 36 | கந்தர்கலி வெண்பா மூலமும் உரையும் (அச்சில்) | | | |
| 37 | நீதிநெறி விளக்கம் – ஆங்கிலமும், ஹிந்தியும் | ... | 0 | 50 |
| 38 | நீதிநெறி விளக்கம் – மூலம் | ... | 0 | 10 |
| 39 | நீதிநெறி விளக்கமும் நன்னெறியும்–மூலம் | ... | 0 | 15 |
| 40 | [illegible] | | 0 | 37 |

Registered With the Registrar of Newaspapers for India
Under No. R. No. 1485/57.

Regd. No M. 5574



| | | |
|---|---|---|
| 41 | திருக்குறள்-பொருட்பால்-பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 13 |
| 42 | திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா-மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்-மதுரைக்கலம்பகம்-நீதிநெறி விளக்கம்-மதுரை மீனாட்சியம்மை இரட்டைமணி மாலை மதுரை மீனாட்சியம்மை குறம் ... | 2 75 |
| 43 | திருவாரூர் நான்மணிமாலை-முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் ... | 1 25 |
| 44 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச்செய்யுட் கோவை தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | 1 00 |
| 45 | பண்டார மும்மணிக்கோவை-காசிக்கலம்பகம் சகலகலாவல்லி மாலை ... | 1 00 |
| 46 | சிதம்பரச் செய்யுட்கோவை ... | 0 75 |
| 47 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் ... | 0 50 |
| 48 | திருவருட்பயன் மூலம் இந்தி, ஆங்கில மொழிபெயர்ப்புடன் | 1 00 |
| 49 | திருக்கயிலைத் திருமுறை ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை ... | 0 15 |
| 52 | திருக்குறள்-உரைக்கொத்து-அறத்துப்பால் 3-ம் பதிப்பு | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | 2 75 |
| 54 | ஐந்து நீதி நூல்கள் ... | 0 10 |
| 55 | ஸ்ரீ சயிலம் ... | 0 10 |
| 56 | திருவாசகம் குறிப்புரையுடன் (விஷய சூசனத்துடன்) பழய பதிப்பு ... | 1 50 |
| 57 | திருவாரூர்-திருப்பனுவல்கள் ... | 0 10 |
| 58 | திருவெம்பாவை-திருப்பள்ளியெழுச்சி ... | 0 10 |
| 59 | பழமொழித்திருமுறை ... | 0 25 |
| 60 | திருவாரூர் நான்மணிமாலை ... | 0 50 |
| 61 | Hymns and Proverbs ... | 0 30 |
| 62 | அப்பர்விழா வெளியீடு ... | 0 25 |
| 63 | நவக்கிரகமாண்பு ... | 0 25 |
| 64 | குமரகுருபரர் வரலாறும், அற்புதத்தேவாரத் திரட்டும் ... | 0 30 |

மேலே கண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்.

"தியாகராஜ விலாசம்" 58. பிள்ளையார் கோயில்தெரு,
திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை-5

குறிப்பு:- • இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கோத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்

அச்சிட்டது:- குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்-67